A. & Co. Series 2.

# சிதம்பர - -
# - - ரகசியம்.



IMS0340

அருணகிரி அண்டு கம்பெனி,
தபால் பெட்டி 377,
புண்ட் ரோட் :: சென்னை.

1453

# சிதம்பர ரகசியம்.

விவேகானந்த புத்தகசாலை
ஹிந்து மதாபிமான சங்கம்
காரைக்குடி.

A.R. A. R.M.
KARAIKUDI.

தென்பாதி, T. S. கனகசபை

எழுதியது

'திராவிடன்' ஆசிரியர் திரு சனக சங்கர கண்ணப்பர்
அவர்களின் முன்னுரையுடன் கூடியது.




அருணகிரி அண்டு கம்பெனி,
தபால் பெட்டி 377,
மவுண்ட் ரோட் : : சென்னை.

காப்பிரைட் ரிஜிஸ்டர்ட்]

[விலை அணா 8.

To

J. S. KANNAPPAR,

EDITOR OF THE "DRAVIDAN"

and the Hero of many battles fought
on behalf of the fallen and the
oppressed in our country, this
humble work is grate-
fully dedicated by
the Author.

இப்புத்தகம் "திரா
விடன்" பத்திரிகை
யில் எழுதப்பட்டிருந்த
கட்டுரைகளி லிருந்து
தொகுக்கப்பட்டது.

# முன்னுரை

உலகத்திலேயே உயரிய நாகரீகம் படைத்தவராய்த் தோன்றும் மக்களெல்லாம், வனவிலங்கினராய்க் குன்றிலும் குகையிலும் பொந்திலும் புதரிலும், வாழ்ந்திருந்த காலத்து சம்ராச்சியங்கள் ஸ்தாபித்தும், கலைகள் பயின்றும், திரைகடலோடியும், அயல் நாட்டாருக்கு ஞானம் புகட்டியும், புகழ் பெற்ற இப்பாரதப் பொன்னாடு இன்று வீரங் குன்றி, ஆண்மை இழந்து அடிமை நாடாகத் தவிப்பதற்குக் காரணமென்ன ? இத்தகைய வீழ்ச்சிக்குக் காரணம் அறிய நாம் அதிகம் ஆராய வேண்டுவதில்லை. நம் முன்னோர் பலர் அவ்வழி முயன்று காரணம் கண்டு வைத்திருக்கின்றனர். இவ்வீழ்ச்சி இன்று நேற்று உண்டானதல்ல. சரித்திர காலம் ஆரம்பமாவதற்கு முன்னமேயே இந்நாடு வீழ்ச்சியடைந்து விட்டது. அதனை முதன் முதல் கண்டறிந்தவர் கபிலவஸ்து ராஜகுமாரரான சித்தார்த்தர். இயற்கை மதமான ஆதிமதம், பார்ப்பன மதமாக மாறி, ஜாதிப் பாகுபாடுகள் தோன்றி இந்திய சமூகம் பிரிவுற்றதைக் கண்ட சித்தார்த்தர் தம் அறிவின் சக்தியால் பின் வரப் போகும் பேராபத்தை முன்னதாகவே உணர்ந்தார். பார்ப்பன மதம் நாடெங்கும் பரவி, அநாசாரங்களும், குருட்டு நம்பிக்கைகளும், விக்கிரகவணக்கங்களும், கணக்கற்ற ஆலயப் பிரதிஷ்டைகளும், யாகங்களும், மற்றும் மிருக பலிகளும், தாண்டவமாடி வருவது கண்டு மதியூகியாகிய சித்தார்த்தர் ஏக்கமுற்றார். சொர்க்க நரக உணர்ச்சிகளை யுண்டுபண்ணிச் சுயநலப் புரோகிதர்கள் பாமர ஜனங்களுக்கு சுவர்க்கபோகமளிக்கவும், நரக வேதனை விலக்கவும், பல சூழ்ச்சிகள் செய்து ஏமாற்றுவதை பேரறிஞர் சித்தார்த்தர் உணர்ந்து சுவர்க்க நரகம் உண்டா ? பக்தி மோட்சம் உண்டா ? உண்டாயின் அதனை யடைய உபாயமென்ன ? என ஆராய்ந்து உலக மக்களை ஈடேற்ற எண்ணி, நாடு, நகரம், மனைவி,

மக்களை விட்டுத் துறவு பூண்டார். சாஸ்திர முறைப்படி கடுந்தவ மியற்றினர். கடவுள்கள் பிரத்யட்சமாக வில்லை. அப்பால் சாத்திரத்தைச் சுட்டு சதுர் மறையைப் பொய் யாக்கி சூத்திரங் கண்டு சுகம் பெறத் தானுகவே முயன்றார்.

கடைசியில் உண்மை நெறியை உணர்ந்து புத்தரானர். அவர் கண்ட சூத்திர மென்ன? அது வெகு சுலபமானது. எல்லோரும் பின்பற்றக் கூடியது. காசு பணம் செல வில்லாதது. அதாவது மனத்தூய்மையும், மொழித்தூய்மையும், செயல் தூய்மையும், உடையோர் இம் மண்ணுலகத்திலேயே பொன்னுலக வாழ்வு பெறுவர் என்பது புத்தர் கண்ட உண்மை. கடவுளைப்பற்றி அவர் சிந்திக்கவே யில்லை. கடவுள் உண்டா எனக் கேட்டவர்களுக்கு மௌனஞ் சாதித்ததே அவர் அளித்த பதில். மனமொழிகளைத் தூய்மையாக உடையவன் கடவுளைப்பற்றிச் சிந்திக்க வேண்டாமென்பது அவர் கருத்து. புத்தரது போதனை பார்ப்பன மதத்தின் ஆணிவேரைக் கல்லி எறிந்தது. வருணாச்சிரமக் கோட்டையைத் தகர்த்தெறிந்தது. புரோகிதர்கள், குருக்கள்கள் வாயில் மண் அள்ளிப் போட்டது. புத்தரது அருமையான அரிய போதனையைக் கேட்டு மகுட மன்னர்களும், சக்ரவர்த்திகளும் அம்மதத்தைத் தழுவினர்.

ஆனல் புத்தர் காலத்திற்குப் பின் சங்கரர் தோன்றித் தமது மாயாவாதத்தினல் சக்ரவர்த்திகளையும், மகுட மன்னர்களையும் மயக்கி, மறுபடியும் பார்ப்பன மதத்தையும், கடவுள்களையும், இந்தியாவில் நிலைநாட்டினர். பார்ப்பன மத எழுச்சியே இந்தியாவின் தற்கால அடிமை வாழ்விற்குக் காரணம் என்பது வங்க நாட்டுச் சரித்திர அறிஞர் ராமச்சந்திர தத்தரின் சிந்தாந்தம். பிற்காலம் தோன்றியவர்களும் அவரது முடிவுக்கே அரண் செய்திருக்கின்றனர். பார்ப்பன மதமும், விக்கிர ஆராதனைகளும், ஜாதி பாகுபாடும், இந்தியாவின் வீழ்ச்சிக்குக் காரணமென்பது ராஜா ராம் மோகனராய், கேசவ சந்திர தத்தர், தயானந்த சரஸ்

வதி, ராமதீர்த்தர், விவேகானந்தர், ஆசிரியர் சுந்திரம் பிள்ளை, ஸர் தியாகராயர், டாக்டர் நாயர் முதலியோர் துணிபு.

இதைப் பின்பற்றியே சுயமரியாதை இயக்கம் தோன்றி சமூக விடுதலைக்காகப் பாடுபடுகின்றது. பார்ப்பன மதக் கொடுமையின் பயனாக ஏற்பட்ட விக்கிரக ஆராதனையாலும், புராண நம்பிக்கையாலும், இந்திய சமூகம் அடிமைப்பட்டதுமின்றிப், பொருளிழந்து வறுமைப் பிணியிலமிழ்ந்து வருகின்றது என்பதை எல்லோரும் அறிய வேண்டுமென்பதே எமது கொள்கை. இத்தகைய அடிமை வாழ்க்கைக்கு ஆதாரமாயிருக்கப்பட்ட நம்பிக்கைகளை வேரறக் களைய இப்புத்தகம் ஒரு வழிகாட்டியாக இருக்குமென்பதிற் சந்தேகமில்லை.

சிதம்பர ரகசியம் என்பது எவர் மனதையும் வசீகரிக்கக் கூடியது. காலப் போக்கை அனுசரித்து அந்த ரகசியத்தைக் கூடுமானவரையில் எமது நண்பர் இப்புத்தகத்தில் விவரிக்க முயற்சித்திருக்கின்றார். தில்லை நடராஜரின் தாண்டவ தரிசன நேர்மையும், சிதம்பர மகாத்மியத்தைப் பற்றிய புராண வரலாறுகளும் ஆங்காங்கு அவற்றிற் கேற்றபடி, அறிவு புகட்டக் கூடிய மறுப்புகளுடன் மிக நேர்மையாக எழுதப்பட்டிருக்கின்றன. பண்டைப் புராண உலகிலிருந்து அறிவுச் சுடரொளியால் ஞான வெளிச்சத்தைப் பார்க்கும் பகுத்தறிவாளர்கள் கண்டிப்பாய் இத்தகைய புத்தகங்களை ஆர்வத்துடன் ஆதரிப்பார்களென்று நம்புகின்றோம்.

சென்னை,
10—12—30. }

ச. ச. கண்ணப்பன்,
"திராவிடன்" ஆசிரியர்.

# உள் அடக்கம்



அக்கினியில் மூழ்கி—அதனால் தீண்டாமையை ஒழித்துக்கொண்ட நந்தனாரை ஸ்ரீ நடராஜர் தெரிசனத்திற்குத் தில்லைவாழந்தணர்கள் வணங்கித் தொழுது வரவேற்கின்றார்கள்.

# சிதம்பர ரகசியம்.

---

## டாஷ் முதலியார் சிதம்பர தேரிசனம்.

ஸ்ரீ நடராஜர் ஆலயத்தில் தீட்சதர்கள் நாலணு வாங்கிக் கொண்டு ஒரு திரை மறைவை நீக்கி ரகசியம் காட்டுகின்றூர் கள். இது நாலணு விலையுள்ள ரகசியம். அதிகப்படியான பணம் செலவு செய்யக்கூடிய யோக்கியதையும் அந்தஸ்து மிருந்தால் இதைவிடப் பெரியதோர் ரகசியம் பாக்கலாம். அந்த ரகசியத்தை யாராவது அறிந்துகொள்ள ஆசைப்பட் டால் அதே ரகசியத்தைப் பிரத்திபட்சமாகக் கண்ட பல கனவான்களிருக்கின்ருர்கள். அந்தக் கனவான்களிடமிருந்து தெரிந்துகொள்ளுங்கள். சிதம்பர யாத்திரை சென்றுவந்த கனவான் அந்த விசேஷமான க்ஷேத்திரத்தில் தான் கண்ட அதிசயங்களை விஞேதனிடம் நேரில் சொல்லியிருக் கின்ருர். சிதம்பர ரகசியத்தைவிட மிகவும் ரகசியமான கதை. அந்த நண்பரின் பெயர்——முதலியார். இருப்பிடம் சென்னை. ஊரைச் சொன்னுலும் சொல்லலாம். பேரைச் சொல்லக்கூடாதாகையால் அவரை டாஷ்——முதலியார் என்றே கூப்பிடுவோம். பக்தியோ, உணர்ச்சியோ ஒன்று மில்லாமல் தமாஷ் பார்ப்பதற்காகவும், ஷோக்காகவும், ஸ்தல யாத்திரை செய்யும் கனவான்களின் வர்க்கத்தில் டாஷ் முதலியாரைச் சேர்த்துக்கொள்ள வேண்டியது. இத்தகைய கனவான்கள் கோயிலுக்குப் போகும்போது அணியும் உடுப்பு, தாசி வீட்டிற்கு மைனர் விளையாடப் போகும் உடுப்பைவிடப் பன்மடங்கு தடபுடலாயிருக் கும். ஆனுல் ஓபன்கோட், காலர், டை, மூக்குக்கண்ணுடி உட்பட சந்தனப் பொட்டும், விபூதியும் பார்த்தால் இருபர் தாம் நூற்ருண்டின் அதிசய பக்தர்கள் என்பதைக் கண் டிப்பாய் அறிந்துகொள்ளலாம். முதலியார் சிதம்பரம் வந்து

சேர்ந்தார். தீட்சதர் ஒருவர் ரெயில்வே ஸ்டேஷனில் காத்திருந்து முதலியாரை வரவேற்ருர். வீட்டிற்கு அழைத்துப்போனர். சோடச உபசாரங்கள் செய்யப்பட்டன. "அன்று மாலை முதலியார் அவர்களால் நடராஜர் ஆலயத்தில் கற்கண்டு பாவாடையும் சம்பா கொஸ்தும் விசேஷ வைபவம்" என்று பிரகடனம் செய்யப்பட்டு அதற்கத்தாட்சியாக இடி முழக்கம் போல் அதிர் வெடிகள் போடப்பட்டன. முதலியாரைத் தீட்சதர்கள் தடபுடலாக ஆலயத்திற்கு அழைத்துச் சென்ருர்கள்; மாலை சூட்டினுர்கள். அதிகம் கூறுவதேன்.—முதலியார் ஆயிரம் ரூபாய்க்குமேல் செலவிட்டார். விபூதிப் பிரசாதம் பெற்றுக்கொண்டார். தீட்சதர்கட்குத் தட்சணை வழங்கினர். மேளதாள விருதுகளுடன் தில்லைவாழ் அந்தணர் புடைசூழக் கட்டளை தீட்சதர் வீட்டில் கொண்டுவந்து விடப்பட்டார். அன்றிரவு முதலியாருக்கு ஆடம்பரமான விருந்து நடந்தது. தில்லைவாழ் அந்தணர்களில் பலர் முதலியாருடன் வெகுநேரம்வரையில் பேசிக்கொண்டிருந்துவிட்டு அவரவர் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். பின்பு தீட்சதர் டாஷ் முதலியாரை வேருெரு வீட்டிற்கு அழைத்துச் சென்ருர். அவ்வீடு தீட்சதரின் வைப்பாட்டி வீடு. பிராம்மண ஜாதியில் பால்ய விதவைகள் அதிகமாகையால், தீட்சதர் மிக ரூபவதியான ஒரு இள விதவையை நட்பு கொண்டிருந்தார். இந்த அம்மாளுக்கு வயது 15 அல்லது 16 இருக்கலாம். அழகே திரண்டுருண்டு—அழகே ஒரு உருவமாக அமைந்த ஒப்புயர்வற்ற ஒய்யாரத் தோற்ற முடையவள். நவ நாகரீக பக்தராகிய டாஷ் முதலியாரை தீட்சதர் அவ்வீட்டிற்கு அழைத்துச் சென்றவுடன் "இராஜாமணீ! இராஜாமணீ!" என்று கூப்பிட்டுக் கொண்டே கதவைத் தட்டினுர். கதவு திறக்கப்பட இராஜாமணியின் பேரழகை முதலியார் ஜாடையாகக் கவனித்தார்.

"இராஜம்! யாரென்று நினைக்கின்ருய். அவாள் பட்டணம். பெரிய மனுஷியாள். சாமி தெரிசனத்திற்காக வந்தார்கள். இன்று பாவாடை பிர்மானந்தம்! தீட்சதா

ளுக்கெல்லாம் நிறம்ப திருப்தி. மகராஜன்! அவருக்கென்ன குறைச்சல். மென்மேலும் சௌகர்யமாக இருக்கும்படி பகவான் அனுக்கிரகிப்பார்" என்று கூறிக்கொண்டே தீட்சதர் திண்ணையில் உட்கார்ந்தார். முதலியார் எதிர்முகமாக அமர்ந்தார். இராஜாமணி ஒரு வெள்ளித் தாம்பூலப் பெட்டியைக் கொண்டு வந்து முதலியார் எதிரில் வைத்தாள். முதலியார் தாம்பூலம் தரித்துக் கொண்டே தீட்சதருடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தார். பின்பு முதலியாருக்குத் திண்ணையில் ஒரு படுக்கை போடப்பட்டது.

"முதலியார்வாள்! அகாலமாய்விட்டது. நம்வீட்டில் படுக்கை சௌகர்யமாயிராது என்று இங்கு அழைத்து வந்தேன். இதுவும் நமது ஆம்தான். சௌகர்யமாகப் படுத்திருங்கள். இன்றைய தினம் பேரம்பலத்தில் நமக்குக் காவல் முறையாதலால் நான் படுக்கைக்குக் கோவிலுக்குப் போகவேண்டும். உள்ளே அம்மா இருக்காங்க. ஏதாவது வேண்டுமானால் தாராளமாகக் கூப்பிட்டுக் கேளுங்கள். சங்கோஜப்படவேண்டாம். நான் காலையில் வந்து தங்களைப் பார்க்கிறேன். தில்லையம்மன் கோவிலுக்குப் போய் அர்ச்சனை செய்துகொண்டு வரலாம்" என்று தீட்தர் கூறி முதலியாரிடம் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டார். முதலியார் திண்ணையில் படுத்தார்.

இவர் நவீன நாகரீக பக்தர் என்று கூறியிருப்பதை வாசகர்கள் ஞாபக மூட்டிக்கொள்ளவும். பல விதமான எண்ணங்கள் உதித்து இவர் மூளையைக் குழப்பியதால் முதலியாருக்கு நித்திரை வரவில்லை. இராஜாம்பாளின் அழகிய உருவம் அவர் கண் முன் உலாவியது. இவ்வாறு முதலியார் மனோ அமைதியின்றிப் புரண்டுகொண்டிருக்கையில் வாசற்கதவு திறக்கப்பட்டது. கமகம வென மல்லிகைப் புஷ்பத்தின் இயற்கை மணமும், நெப்போலியன் வில்லி ரோஸ் ஸெண்டின் வாசனையும் வீசிய வேகத்தால் முதலியார் திடுக்கிட்டார். ஜிலீர்! ஜிலீர்! எனக் கால் தண்டைகளசைய நாட்டிய நடை நடந்துகொண்டு இராஜாம்பாள்

வெளிப்பட்டாள். தன் அழகிற் சிறந்த பிரகாசம் பொருந்திய திருமேனி முதலியார் கண்களுக்கு நன்ருகத் தெரியட்டுமென்று நிலவு வெளிச்சத்தில் வந்து நின்ருள். டாஷ் முதலியார் எழுந்து உட்கார்ந்துகொண்டு திரு திரு என விழித்தார்.

"கொசு உபத்திரவம், முதலியார்வாளுக்கு நித்திரை வரவில்லை போலிருக்கிறது" என்ருள் இராஜாம்பாள்.

"ஆம்" என்று தலையை அசைத்துக்கொண்டே "இந்த முனிஸிபாலிட்டியார் தண்ணீர் குழாய்கள் ஏற்படுத்தி ஸைட்சானல் கட்டாமலிருப்பதால் சுகாதாரத்திற்கு மிகக் கெடுதியாயிருப்பதுடன் கொசுக்கள் உபத்திரவமும் அதிகமாகவே இருக்கின்றது" என முதலியார் பதிலளித்தார்.

"அப்படியாஞல் முற்றத்தில் வந்துபடுத்துக் கொள்ளுங்களேன். பந்தல்போட்டுத் தண்ணீர் கொட்டி ஜில்லென்று காற்று வீசுகின்றது. சுகமாய் நித்திரை வரும்" என்று கூறி அம்மாள் உள்ளே செல்ல, முதலியார் படுக்கையைச் சுற்றிக்கொண்டு பின்பற்றினுர். முற்றத்தில் போடப்பட்டிருந்த ஒரு பெஞ்சியின் மீது படுக்கையை விரித்துக் கொண்டு முதலியார் உட்கார்ந்தார். உடனே வாசற்கதவு சாத்தப்பட்டது. முதலியார் சுற்று முற்றும் பார்த்தார், எதிரிலிருந்த ஒரு அலமாரியில் பல சீசாக்கள் காணப்பட்டன.

"அவை யெல்லாம் பன்னீர் சீசாக்களோ?" என்று முதலியார் கேட்டார்.

"இல்லை! அய்யா குளிர்ச்சிக்காக சாப்பிடுவதற்கு ஷர்பத் வகைகள்" என்று கூறி இராஜாம்பாள் அதில் ஒரு சீசாவையும் கிளாஸையும் எடுத்துக்கொண்டு வந்து முதலியார் எதிரில் வைத்தாள். முதலியார் சீசாவை எடுத்துப் பார்த்தார். அது மிக வுயர்வான விஸ்கி என்பதை யறிந்து கொண்ட அளவில் டாஷ் முதலியாருடைய தலை தானுகவே ஆடிற்று. டாஷ் முதலியார் நவ நாகரீக பக்தர் என்று நாம்

ஏற்கனவே கூறியிருக்கின்றேம். சென்னை வாசியாகையால் இத்தகைய திருவிளையாடல்களில் மிகத் தேர்ந்தவர் என்று நாம் கூறுதல் மிகையாகும். புன்னகையுடன் அந்தப் பானத்தைக் கிளாஸில் விட்டு முதலியார் வேண்டியமட்டில் அருந்தினர். ஹெ! ஹெ! என்று கனைத்துக்கொண்டார்.

"தீட்சதர் இவையெல்லாம் சாப்பிடுவது வழக்கமா?" என்று முதலியார் கேட்டார்.

"என்ன அதிசயமாகக் கேட்கிறீயளே! அது என்ன தெரியுமா? தேவாமிர்தம்! சீசாவிலடைத்து வந்திருக்கின்றது. நடராஜருக்குக்கூட இதை நைவேத்தியம் செய்வதுண்டு," என்று கூறி, இராஜாம்பாள் அந்தச் சீசாவிலிருந்த மிகுதியைக் காலிசெய்து விட்டாள்.

இராஜாமணியின் புன்னகை தவழ்ந்த முகத்தை முதலியார் உற்றுப் பார்த்தார். உருக்கு முகத்தில் ஒளி வீசும் அபரஞ்சித் தங்கம்போல் பிரகாசிக்கும் முகவிலாசமும், உருண்டு திரண்டு மழமழப்பேறியிருக்கும் உருப்புக்களும், சாமுத்திரிகா லட்சணத்திற்குச் சிறிதும் வேற்றுமையின்றிப் பாதாதிகேச பரியந்தம் அமைந்துள்ள சரீர அமைப்பும் கண்கொள்ளாச் சேவையாக ஜொலித்தன.

"இது தான் சிதம்பர ரகசியமோ?" என்றார் முதலியார்.

"சபையிலே திரைமறைவிலுள்ள தங்க வில்வ மாலைகளைப் பார்த்தியளோ என்னே? அதுதான் சிதம்பர ரகசியம்" என்றாள் இராஜாம்பாள்.

"அந்த ரகசியத்தில் ஒன்றும் அதிசய மில்லை" என்றார் முதலியார்.

"நடராஜரும் தீட்சதர்ளும் ஒன்றுதான். தில்லை மூவாயிரவர் திருக் கைலாயத்திலிருந்து வந்தவர்களில் நடராஜரும் ஒருவர் என்பதைத் தாங்கள் அறியீர்களோ?" என்று கூறி அம்மாள் முதலியரைப் பார்த்துக் கண்களால் ஒரு வெட்டு வெட்டினர்கள். முதலியாரின் தலை கிறு கிறுவெனச் சுழன்றது.

"பக்தர்களுக்கு ஆதரவு அளிப்பதற்காகவே நடராஜப்பெருமானும் தீட்சதர்களும் இப்பூமண்டலத்தில் அவதரித்திருகின்றபடியால் தங்கள் போன்ற மெய்யன்பர்களுக்கு நிதரிசனமாகக் காட்சி கொடுத்து ஆதரிப்பதே அவர்கள் கடமையாகும்" என்று அம்மாள் தொடர்ந்து மொழிந்து தனது மலர்போன்ற கையை டாஷ் முதலியார் மீதுபோட்டார்கள். அந்த மிருதுவான கையின் ஸ்பரிச விசேஷத்தால்—பனிக்கட்டி மேலே பட்டதுபோல் முதலியார் சரீர மெங்கும் ஜில்லென்ற ஒருவிதப் புளகாங்கித உணர்ச்சி எழும்பியது.

"ஒ! இதுதான் சிதம்பர ரகசியத்தின் பேரானந்தமோ? கண்டு கொண்டேன்! கண்டு கொண்டேன்! பேரானந்தக் காட்சியை நேரில் கண்டு கொண்டேன்! இத்தகைய இரகசியக் காட்சியிருக்கச் சபையில் திரையைத் தூக்கித் தங்க வில்வ மாலையைக் காட்டி இது தான் "சிதம்பர ரகசியம்" என்று ஏன் ஏமாற்றுகின்றார்கள்," என்று முதலியார் ஆனந்த மேலீட்டால் குதித்தார்.

"தங்கள் போன்ற நவ நாகரீக பக்தர்கள்தான் இந்த ரகசியத்தை அறிவர். காட்டுமிராண்டிகளும், அறிவைப் புராணங்களுக்குப் பறிகொடுத்த மட்டிகளும், சபையிற் திரை தூக்கப்பட்டவுடன் "ஹர! ஹர! சம்போ மகாதேவா! ஆனந்த நடேசா! மகாப் பிரபு! என்று கைகூப்பித்தொழுவார்கள். அத்தகைய பேதைகளைப்பற்றி நாம் பேசி வீண் காலம் போக்குவதில் யாது பயன்" என்று இராஜாம்பாள் உற்சாகமாக உரைத்தாள்.

பின்னர் மதுபான மயக்கத்தினால் அவர்களிருவரும் உலகவாசனை யற்றுத் தங்களை மறந்திருந்தார்கள். மறுதினம் முதலியார் கையிலணிந்து கொண்டிருந்த சங்கிலியும், வைர மோதிரங்களும் காணப்படவில்லை. கையிலிருந்த பணமெல்லாம் ரகசியமாய் மறைந்துவிட்டது. ரயில் செலவுக்குக் கடன் வாங்கிக்கொண்டு சென்னைக்குப் பிரயாணமானார்.

## டாஷ் முதலியாரின் மதிமயக்கம்!

டாஷ் முதலியார் சென்னை வந்து சேர்ந்தார். "ஆசையும் நேசமும் பொருந்தினதங்கே, பேசலும் வாசமும் பிதற்றலுமிங்கே" என்று சிதம்பரத்தில் முத்தியடைந்த நந்தனர் பாடியபடி முதலியாருடைய மனம் சிதம்பர ரகசியத்தில் ஒன்றுபடக் கலந்து போயிற்று. வேறு வழியில் அவர் சிந்தை நாடவில்லை. பயித்தியம் பிடித்தவர் போலிருந்தார். வாயில் வந்தவற்றைப் பேசுவார், எல்லோரையும் ஏசுவார். இவ்வாறு நாளடைவில் முதலியாருக்குப் பயித்தியம் அதிகமாய் விட்டது. டாக்டர்கள் பரிசீலனை செய்து பற்பல விதமான மருந்துகள் பிரயோகம் செய்தும் முதலியார் குணப்படவில்லை. இராஜாமணி அம்மாள் கொடுத்த மருந்து முதலியார் புத்தியை மயக்கி யிருக்கிறதென்பதை டாக்டர்கள் அறிவார்களா? யாராவது சினேகிதர்கள் இவ்வாறு உங்கள் சிந்தை தடுமாற்ற மடைந்திருப்பதேன்? என்று கேட்டால் அதற்குத்திரமாக "பித்தம் தெளிய மருந்தொன்றிருக்குது பேரின்ப மன்றுள்ளே—" என்று பிரமாதமாகப் பாடுவார்.

டாஷ் முதலியாரின் பெற்றோர்கள் பெரும் வைதீகர்கள், கொழுத்த சிவ பக்தர்கள். சிவானந்த யோகீஸ்வரர் என்ற ஒரு சன்னியாசி இவர்கள் வீட்டிலேயே இருந்துகொண்டு தேவாரம், திருவாசகம் முதலிய பாடல்களைச் சொல்லிக்கொண்டும், புராணங்களைப் படித்து வியாக்கியானம் செய்துகொண்டு மிருந்தார். சிறிது காலத்திற்கு முன் காசியாத்திரை சென்றிருந்த சாமியார் இப்பொழுது தான் திரும்பி வந்தார். தன் மகன் சித்த சுவாதீனமின்றி இருக்கிற நிலையில் சாமியார் வந்தது டாஷ் முதலியாரின் தகப்பனுக்குச் சிறிது மனோசாந்தியைக் கொடுத்தது. சிவானந்த யோகீஸ்வரர் டாஷ் முதலியாரை அழைத்து அவர் முகத்தை உற்றுப் பார்த்தார்.

"சாமிகளே! காசியாத்திரை சென்றீர்களே? ஏதாவது நீங்கள் பிரத்திட்யமாகக் கண்டதுண்டா? நான் சிதம்

பரம் போய் சிதம்பர ரகசியத்தை நேரில்கண்டானந்தித்து வந்திருக்கிறேன்'' என்று நகைத்துக்கொண்டே கேட்டார் டாஷ் முதலியார்.

"சிதம்பரமாவது! ரகசியமாவது! என்ன உளறுகிறாய்? ஏன் உன் சிந்தை இவ்வாறு கலங்கி இருக்கின்றது. சிதம்பர ரகசியத்தின் மேன்மையை உனக்குச் சுருக்கமாகத் தெரிவிக்கின்றேன். கேட்பாயாக! சிதம்பரம் ஆலயத்தின் நிர்மாண ரகசியம் பல பேருக்குத் தெரியாது யோக முதல்வராகிய பதஞ்சலி முனிவர் இந்த ரகசியத்தை யறிந்து அதனை விஸ்வகர்மாவுக் கறிவித்து அதன்படி ஆலய நிர்மாணம் செய்வித்தார்.

### சிதம்பர ஆலய நிர்மாண ரகசியம்.

ஒரு யோகியின் சரீரத்தை வடக்கே தலையும், தெற்கே பாதமும் அமைத்துச் சமாதியிட்டதுபோல் சிதம்பர ஆலயம் கட்டப்பட்டிருக்கின்றது. ஆயிரக்கால் மண்டபம் தலையிலுள்ள ஆயிரம் இதழ்களையுடைய கமல மெனப்படும். சிவகங்கை மூளையின் மேற்புறத்துள்ள சந்திர புஷ்கரணி. ஜாக்கிரதாவஸ்தையிலே ஆன்மாவினுடைய அறிவு மூளையிலே விளங்குவது இயல்பாதலால், தேவ விமானத்தில் விடியற்காலத்திலும், பிரதோஷ காலமாகிய ஆனி, மார்கழி மாதங்களில் ஆயிரக்கால் மண்டபத்திலும், நடராஜருக்கு மகா அபிஷேகம் நடக்கும். இவற்றின் தென்பாகத்தில் ஸ்ரீ குருமூர்த்தியும், ஜோதிலிங்கமும் இருக்குமிடம் விசுத்தி ஸ்தானமாகப் பாவிக்கப்படும். அதற்குத் தெற்கில் திருச்சிற்றம்பல மென்னும் மகாசபை இருக்கின்றது. அங்கே பிர்மா, விஷ்ணு, ருத்திரன், மகேஸ்வரன், சதாசிவம் இவர்களுக்கென ஐந்து பீடங்களிருக்கின்றன. பஞ்சாட்சரம் என்னும் 5 எழுத்துக்களும் 5 படிகளாயிருக்கின்றன. கதவு அவித்தை யெனப்படும். தொண்ணூற்றாறு தத்துவங்களும் 96 பலகணிகளாக அமைக்கப்பட்டிருக்கின்றன. கனகசபையின் நடுவிலிருக்கும் நான்கு பொற்கம்பங்கள்

நான்கு வேதங்களாகும். சுற்றிலுமுள்ள 28 மரத்தூண்கள் ஆகமங்களாகும். ரகசியம் முதல் நடராஜரிருக்கும் இடம் வரையில் பிரணவபீட மெனப்படும். அந்தப் பிரணவ பீடத்தில் சுக்கில வடிவமாகிய ஆனந்தநடராஜப் பெருமான் சகல திருமேனியுடன் அமர்ந்துள்ளார். அவர் பின் வாயுபாகத்தில் சுக்கில நிஷ்களமாகிய வியக்தாவியக்த லிங்கமும், அதன் பின் ஆரண ஆகமங்களும், திருச்சிற்றம்பலம் என அறிந்தோர்களால் புகழ்தோதப்படுவதாகிய அழியாப் பரச்சுடர்ச் சிவவொளிச் சிதாகாச வடிவம் விளங்கா நிற்கின்றது. இதனையே ஞானக்கண்ணுற் கண்டோர் "சிதம்பர ரகசியம்" என்பர். இந்தப் பிரணவ பீடத்திலே உலக மாதாவாகிய சிவகாமசுந்தரி என்னும் பராசக்தியோடு தூலவடிவமாகிய நடராஜ மூர்த்தியும், இரத்தின சபாபதி என்னும் இரத்தினமயமான சூக்கும நடராஜரும், சூக்குமா தாரமான மற்றோர் ஸ்படிக லிங்கமும் இருக்கின்றன. ரகசியத்தை நிஷ்களமென்றும், வியக்தாவியக்த லிங்கத்தை சகன நிஷ்களமெனவும், நடராஜ மூர்த்தியை சகன வடிவமென்றும் சொல்லப்படும். சிற்சபையின் கீழ்ப்புறத்தில் பிர்மதேவரும், தென்புறத்தில் விஷ்ணு மூர்த்தியும், வடபுறத்தில் வைரவ மூர்த்தியும் இருக்கின்றார்கள். விமானத்தின் மேலுள்ள 9 கும்பங்களும் வாமை முதலிய சக்திகளாம். 64 கை மரங்களும் 64 கலைகள். இருபத்தோராயிரத்தி அறுநூறு தங்க ஓடுகளும் மனிதனுல் பிரதிதினமும் விடப்படுகின்ற சுவாசங்கள். ஆணிகள் எழுபத்தீராயிரமும் சுவாசத்திற்காதாரமான நாடிகளாகும். சபையின் தெற்கேயுள்ள கனகசபை சிற்சபையின் அநேக பாகங்களைப் பெற்றதாய், பதினெண் புராணங்களையும் பதினெட்டு தூண்களாக உடையதாய், மணிபூரக ஸ்தானமாயிருக்கின்றது. இங்குள்ள சபைகளைந்தும் ஐவகைக் கோசங்களை யுணர்த்தும். இராஜசபை (ஆயிரக்கால் மண்டபம்) அன்னமய கோசம், தேவசபை (பேரம்பலம்) பிராணமயகோசம், நிருத்த சபை மனோமயகோசம், கனகசபை விஞ்ஞான மயகோசம், சிற்சபை ஆனந்தமயகோசம்.

மனிதனுடைய இருதய கமலம் சரீரத்தின் மத்தியி லிராமல் சிறிது இடப் புறமாக விலகியிருப்பதுபோல் இங் கும் சபை ஆலயத்தின் மத்தியிலிராமல் சிறிது இடது பாரிசத்தில் அமைந்திருக்கின்றது. இருதயத்தில் இரத்தம் பிரவேசிக்கும் வழி பக்கங்களிலிருப்பதுபோல் நடராஜர் சன்னிதானத்தை யடையும் வழிகளும் சபையின் பக்கங் களில் அமைந்திருக்கின்றன. இது தான் "சிதம்பர ரகசி யம்" பதஞ்சலி வியாக்கிரபாதர் போன்ற சுத்த ஞானி களும் கண்டறிதற் கருமையாயிருந்த இந்த சிதம்பர ரகசியத்தை நீ எங்ஙனம் கண்டாய்." என்றார் சுவாமி யார்.

"சுவாமிகளே! அன்னமயம் பிராணமயம், என்று ஞானமயமாகப் பெரியதோர் பிரசங்கம் செய்து விட்டீர்கள். சிதம்பர ரகசியத்தை ஓர் யோகியின் சரீரத்திற்கு ஒப் பிட்டு வியாக்கியானம் செய்தீர்கள். நான் கண்ட சிதம்பர ரகசியமோ பேரானந்த மயமான ஒரு போகியின் சரீரமாகும். தாங்கள் கூறும் ரகசியம் உபமான உபமேயப் பிரமாணம். நான் கண்டது பிரத்தியட்சப் பிரமாணம். தாங்கள் சொன்ன சிதம்பர ரகசிய வியாக்கியானத்தை இந்தக் காலத்தில் ஆராய்ச்சியுடையோர் ஏற்றுக் கொள்ளுவார்களா? நான்கு வேதங்களும், 28-ஆகமங்களும், 18-புராணங்களும் தூண் களென்றால் புத்தக வடிவமாகவோ ஓலைச்சுவடி வடிவ மாகவோ உள்ள இந்த நூல்கள் மேலேயுள்ள மண்டபத்தை எவ்வாறு தாங்கி நிற்க முடியும்? தங்க ஓடுகள் சுவாசங் களின் எண்ணிக்கைகளையும், ஆணிகள் நாடிகளின் எண் ணிக்கைகளையும் குறிப்பிடுகின்றன. சுவாசம் நாசி வழி யாக வருகின்றது. கனகசபையின் பொற் சிகரத்தை நாசியா கப் பாவிப்போம். தங்க ஓடுகளைத் தாங்கி நிற்கும் ஆணிகள் அத்தனையும் நாடிகளாயிருப்பதால் மனிதனுடைய சரீரத் தில் மூக்குப் பிரதேசத்தைச் சுற்றிலுமா சகல நாடிகளும் பொருந்தியிருக்கின்றன? சரீரமெங்கும் நாடிகளில்லையா? அதுபோல் ஆலயமெங்குமா ஆணிகள் அடிக்கப்பட்டிருக் கின்றன? இவ்வாறு ஒன்றிற்கொன்று பொருத்தமில்லாத

ஒரு வியாக்கியானத்தை எவ்விதம் ஒப்புக்கொள்ள முடியும்?'' என்றார் டாஷ் முதலியார்.

"அப்பா உனக்கு நல்ல சுவாதீனமில்லை. நாஸ்திக வாதம் பேசுகிறாய். உனக்கு நல்ல புத்தி யுதிக்க ஈசன் அருள் புரிவாராக. சர்வலோக நாயகனாகிய ஸ்ரீமத் நடராஜருடைய பெருமையை உன்போன்ற நாஸ்திகர்கள் அறிவார்களா? முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கருட காந்தர்வ கின்னர வித்தியாதரர்கள் முதலிய சகல தேவர்களும் பதஞ்சலி வியாக்கிரபாதர்களும் கண்டு களிப்பதற்காக; அயனும் மாலும் பாட, நந்தி மத்தளம் கொட்ட, இதர சிவகணங்கள் தாளம்போட, வெள்ளியம்பலத்திலே பேரானந்தக் கூத்தாடிய அந்த நடராஜனுடைய கிருபை யாருக்குக் கிடைக்கும்?'' என்றார் சுவாமியார்.

"சுவாமிகளே! இவ்வளவு பக்த வாத்தியங்களுடன் அந்த நடராஜர் எதற்காக நிர்த்தனம் செய்தார். அந்த விபரத்தை என்னிடம் தெரிவிக்கவும். தற்காலம் நாகரீக நாடுகளில் அந்நாட்டிலுள்ளோர் சந்தோஷ மேலீட்டினால் நாட்டியம் செய்வதுபோல் நடராஜரும் நாட்டியம் செய்தாரா?'' என்று கேட்டார் டாஷ் முதலியார்.

### சிவன்-விஷ்ணு காதல்! ஹரி-ஹர புத்திரன்!

"முதலியாரே! அது மிகவும் விரிவான கதை அதைப் பற்றி சவிஸ்தாரமாய்க் கூறுகின்றேன். கேட்பாயாக—திருப்பாற்கடலில் சமஸ்த தேவர்களாலும் நித்திய சூரியர்களான ரிஷிகளாலும், அநாதியான வேதங்களாலும், துதிக்கப்பட்டு விளங்கும் லட்சுமிபதியான விஷ்ணுவானவர் ஓர் தினம் தமது சேஷ சயனத்திலிருந்து எழுந்து உட்கார்ந்து "சிவ! சிவ! சம்போ மகாதேவா!'' எனக் கண்களில் ஆனந்த அருவி பெருக, அங்கமெல்லாம் மயிர் கூச்செரிய அகில லோக நாதரான கைலாசபதியின் ஆனந்தத் தாண்டவத்தை அன்புடன் தியானம் செய்து துதித்தார். இவ்வாறு ஆனந்த மேலீட்டால் பூரித்த அச்சுதனை ஆதிசேஷன்

பாரம் தாங்க மாட்டாமல் பயந்து மிக்க வியாகூலமடைந்தான். அருகிலிருக்கும் லட்சுமி தேவியும் திகைத்தாள். மகாவிஷ்ணுவின் பாரத்தைத் தாங்க முடியாது ஆதிசேஷன் திகைத்துத் திடீரென அவ்வாறு கனத்ததற்குக் காரணமென்ன வென்று வினவினன். பரந்தாமன் புன்னகை செய்து "ஓ! ஆதிசேஷனே! நீயும் லட்சுமி தேவியும் எதற்காகப் பயப்பட வேண்டும். கருணாநிதியான பரமசிவனுடைய அனுக்கிரகத்தால் யான் இதுவரையில் அடைந்திராத பேரின்பத்தை யடைந்தேன். அத்தகைய ஆனந்தத்தினல் நான் அந்த சர்வேஸ்வரனைத் துதித்து என் சிந்தையை ஏகாக்கிரக நிலையிலிருத்தி யிருக்கையில் என் சரீரம் பூரித்ததினல் கனத்திருக்கலாம். வேறொன்றுமில்லை. அந்த வர்த்தமானத்தை விபரமாகச் சொல்லுகின்றேன். கேட்பாயாக. நான் ஓர் தினம் கைலபங்கிரிக்குச் சென்று எனது கர்த்தான பரமேஸ்வராரைத் தரிசித்துச் சன்னிதியில் வணங்கி நிற்கின்ற காலத்தில் பானுகம்பனல் ஊதப்பட்ட சங்கத்தொனி அஷ்டதிக்குகளிலும் முழங்கவும், பரமபக்தரான நந்தி தேவரால் அடிக்கப்படும் மிருதங்க நாதம் மூவுலகங்களிலும் கேட்கவும், தும்புருநாதர் வீணகானம் செய்யவும், தேவகணங்கள் ஸ்தோத்திரஞ் செய்யவும், கணநாதர் சேவிக்கவும், முப்பத்தி முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளும் தொழுது கொண்டு புஷ்பமாரி பொழியவும், சந்திர சூடரான பகவான் வெளிப்பிரயாணத்திற்குச் சித்தமாயிருந்தவர் என்னை பார்த்துப் புன்னகை செய்து "கர்மத்தையே பிரதானமாக எண்ணி கர்மத்திற்குக் கர்த்தா நாமென்பதை யுணராமல் அகந்தைக் கொண்டிருக்கும் தேவதாரு வனத்து முனிவர்களின் சித்த பக்குவத்தைச் சோதித்தறியும்படி மன்மதா கிருதியான ஒரு வேடத்தை நாம் தரிக்கப்போகின்றோம். நீயும் அதற்கிசைந்த அழகிய பெண்ணுருவந்தரித்து என்னுடன் வருவாயாக" என்று ஆக்ஞாபித்தருளினர். அதன்படி எனது கர்த்தாவாகிய பரமேஸ்வரன் அழகிற்சிறந்த பிக்ஷாடன உருவம் எடுக்க

அவர் ஆக்ஞைப்படி நானும் ஜெகத்திலுள்ள ஜீவ கொடிகளின் மனங்களை ஏககாலத்தில் அபகரிக்கும்படியான ரூபலாவண்யம் நிறைந்த பெண்ணுருவந் தரித்து தரும தேவதையாகிய உமாகந்தரின் சன்னிதியிற்பொருந்தினேன். இத்தகைய அழகிய மோகன அவதாரத்தைப் பார்த்த பரம சிவன் காமாந்தகரனாக; அதன் பயனாக வெளிப்பட்ட அவர் சுக்கிலத்தை நான் கையில் வாங்க உடனே ஒரு புத்திரன் ஜெனித்தான். கையில் பிறந்தமையால் ஹரிஹார புத்திரனாகிய அக்குழந்தை கையனார் என்று பெயரிடப்பட்டு அப்பெயர் வழக்கில் ஐயனார் எனத் திரிந்து கிராம தேவதையாக ஒவ்வொரு கிராமத்திலும் அமர்ந்திருக்கின்றது.

உடனே ஈசன் மனம் குளிர்ந்து "என்னையே கலக்கிய இந்த அழகிய திருமேனியால் தாருகாவன முனிவர்கள், என்னகெதி யடையப்போகிறார்களோ" எனப் பரிகசித்துக் கூறினார். பின்னர் நாங்களிருவரும் தாருகாவனத்தை யடைந்தோம். பிக்ஷாடன உருவம்தரித்த ஈஸ்வரன் ரிஷிகள் வசிக்கும் தெருவில் நின்று கையிலுள்ள தமருகத்தை ஒலிக்க உடனே ரிஷிபத்தினிகள் அனைவரும்வந்து அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். இந்நங்கைமார்கள் சித்தப் பிரேமை கொண்டு ஈசன் பால் மையலாகி காம வெறியினால் அவரை அப்பால் செல்லவிடாமல் தடுத்தார்கள்.

ஈசனுடைய திருவிளையாடல்கள் இவ்வாறாகப் பெண் உருவம் தரித்த நான் சென்று நடத்திய வித்தைகள் அதைவிட அதிக வேடிக்கையானவை. தாருகாவனத்து ரிஷிகள் என்னை வந்து சூழ்ந்து கொண்டார்கள். என் கண்ணம்பினால் அவர்களை எய்த உடனே, அவர்கள் அத்தனை பேரும் பம்பரம்போல் சுழன்றுத் தங்கள் நிலையிழந்து காமபரவசர்களாய் பிரமாதமாக ஒருவருக் கொருகொருவர் சண்டை யிட்டுக்கொண்டு சடைகள் அவிழவும், கையிற் பிடித்திருந்த ஜபமாலைகள் சுழலவும், மரவுரிகள் நழுவவும், நிர்வாணமாக நிற்பதைக் கூடக் கவனியாமல் மெய்மறந்து என்னை இச்சித்துப் பல காமசேட்டைகளைச் செய்தார்கள்.

## நிர்த்தனக் காட்சி.

இதற்கிடையில் சர்வேஸ்வரன் பிக்ஷாடன உருவத்துடன் ரிஷி பத்தினிகளின் கற்பை யழிப்பதைக் கண்டு தாருகாவன ரிஷிகள் என்மீது கொண்ட மயக்கத்தினின்றும் விழித்துக்கொண்டு விசேடக் குரோதமுற்று "இவ்வாறு நம் தவத்தையும் நமது மனவிமார்கள் கற்பையும் கெடுத்த இத் துர்த்தர்களைச் சும்மாவிடக் கூடாது" என்று மகா கொடுமையான அநேக சாபங்களை யிட்டார்கள். இச்சாபங்களெல்லாம் எங்களை என்னசெய்யக்கூடும்? தங்கள் சாபங்கள் விருதாவாகப் போனதைப்பார்த்து அம்முனிவர்கள் அதிக ஆவேசங் கொண்டு அபிசாரஹோமம் செய்ய எத்தனித்தார்கள். ஓம குண்டத்தில் அக்கினிச் சுவாலயை எழுப்பி அபிசார மந்திரங்களைச் செபித்துவருகையில் அந்த அக்கினி குண்டத்திலிருந்து ஒருபயங்கரமான புலி புறப்பட அதனை எங்கள்மீது ஏவினார்கள். அதனை எமது ஐயன் தமது நுனி விரலினால் உரித்து அதன் சர்மத்தை ஆடையாகத் தரித்துக் கொண்டார். அதன் பின் ஓமகுண்டத்திலிருந்து எரிகின்ற கண்களையும் விஷம் கலந்த பெரு மூச்சையும் உடைய ஓர் பெரிய சர்ப்பம் சீறிக் கொண்டு எழுந்து பகவானுக்கு எதிரே வருகையில், நீல கண்டர் அதை அலட்சியமாகப் பிடித்துத் தமது இடது கையில் கங்கணமாகத் கட்டிக் கொண்டார். பின்னர் அந்த ஓமகுண்டத்திலிருந்து முயலகன் என்னும் அரக்கன் தோன்ற ஈசன் அவனைப் பிடித்துத் தமது காலில் நசுக்கினார். அக்கினியை வாரி வீசினார்கள். பசுபதி சுவாலையோடு கூடிய அந்த அக்கினியைத் தமது கரத்தில் ஏந்திக்கொண்டார். அதன் பின் சர்வ லோக நாயகன் சகல உலகமும் கிடுகிடென அதிர்ச்சியடைய முயலகனைப் பாதத்தில் மிதித்துக் கொண்டு தாண்டவ நிர்த்தனம் செய்தார்.

இத்தாண்டவ தரிசனம் கண்டு தாருகாவன ரிஷிகள் சிவன் பெருமையை யுணர்ந்து சிவபக்தியிலாழ்ந்து ஈசனைத் துதித்தார்கள். சகலதேவர்களும் தாண்டவ தரிசனத்தைக்

கண்டு பிர்மானந்த மடைந்தார்கள். இவ்வாறு எல்லொருக்கும் காட்சிதந்தபின் சர்வேஸ்வரன் இனிமேல் எல்லோரும் தன்னைப் பணிந்து கொண்டிருக்கும்படி உத்திரவிட்டு அந்தரத்தியானமானுர். ஆதிசேஷா! கருணாநிதியான பரமசிவனுடைய பிர்மானந்தத் தாண்டவத்தை நினைத்த மாத்திரத்தில் என் உடல் பூரித்து விட்டது'' என்றார் மகா விஷ்ணு.

## யாருக்குத்தான் தெரியும் அவர் பெருமை !

இதைக் கேட்டமாத்திரத்தில் ஆதிசேஷன் ஆனந்த பரவசனாகி அதைத் தானும் தெரிசிக்க விரும்பினான். இதைக் கண்ட விஷ்ணு சிவபக்தனாய் விட்ட சேடனை இனி அடிமைகொண்டிருப்பது அபாரதமென்று அஞ்சி "ஆதி சேஷனே! நீ சிவ பக்தி விசேஷத்தால் தனியனாயினை. இனிமேல் எனக்குப் படுக்கையாக இருப்பது சரியன்று. முன்போல் உன் மீது படுத்து யோக நித்திரைசெய்ய இனி என்மனம் பொருந்தாது. ஆதலால் என் கைங்கர்யங்களை உன் புத்திரனைக்கொண்டு நடத்தும்படிச் செய்துவிட்டு நீ சென்று ஈசன் அருள்பெற்று தாண்டவ தெரிசனம் காண்பாயாக'' என்று ஆசீர்வதித்தனுப்பினார்.

ஆதிசேஷன் மகாவிஷ்ணுவினிடம் அனுமதி பெற்றுக் கொண்டு திருக்கைலாச மலைச் சார்பையடைந்து அக்கினியின் மத்தியில் நின்று ஐம்புலன்களையும் அடக்கிக் கடுந் தவமியற்றினான். இவ்வாறு தவம் செய்தலைக் கண்டு ஈசன் மனமகிழ்ந்து மேற்கொண்டு அவனைச் சோதிக்க எண்ணி பிர்மாவின் உருவமெடுத்து சேஷன் முன் பிரப்தமாகி அவனுடைய கோரிக்கை என்னவென்று கேட்டார்.

ஆதிசேஷன் கலைமகள் நாயகனை வணங்கி "சுவாமி! எனக்கு ஒரு வஸ்துக்களிலும் இச்சை யில்லை. நிர்மலனான பரமசிவனைக் குறித்துத் தவம் செய்கிறேன். அப் பரம சிவனே எனக்கு நற்கதியளிப்பார்''எனப் பதில் அளித்தான்.

சதுர்முகனாக வந்த ஈஸ்வரன் மேற்கொண்டும் ஆதி சேஷனுடைய மனோ நிச்சயத்தை யறியவேண்டி "ஆதி

சேஷா! பரமேஸ்வரனுல் கொடுக்கக்கூடிய வரம் என்னுல் கொடுக்கமுடியாதா? உன் உண்மையான கருத்தை யுரைத்தால் உன் மனேபீஷ்டத்தைப் பூர்த்தி செய்து வைக்கின்றேன்'' என்று மறுபடியும் வினவினுர்.

அதைக்கேட்ட சேஷன் "ஓ! பிதாமகரே! ஏன் விருதாவான மொழிகளே யுரைக்கின்றீர். சர்வேஸ்வரனுகிய பரமசிவனிடத்திலின்றி வேறு யாரிடத்திலும் எனக்கு வேலே இல்லே.'' என்று கண்டிப்பாய்க் கூறினுன்.

அதன் பின் பிர்மா ஆதிசேஷனுடைய கோரிக்கை தான் என்னவோ என்று வற்புறுத்திக் கேட்க ஈசனுடைய தாண்டவ தெரிசனத்தைப் பார்க்க விரும்பித் தவம் செய்வதாகக் கூறினுன். அதற்கு மேல் ஆதிசேஷனுக்கும் பிர்மாவுக்கும் வெகுவாகத் தர்க்கம் நடந்தது. ஆதிசேஷன் தன் நிலேயிலிருந்து ஒரு சிறிதும் கலங்கினுனில்லே. உடனே ஈசன் மனமகிழ்ந்து பார்வதி சமேதராக ரிஷப வாகனரூடராய் ஆதிசேஷனுக்குக் காட்சி கொடுத்தார். ஆதிசேஷன் ஈசனே வணங்கித் துதித்துக் கொண்டு தன்னே மறந்து நிற்கையில்; ஈஸ்வரன் ஆதிசேஷனேக் கருணேயுடன் பார்த்து, அவனுடைய விருப்ப மென்னவென்று விசாரிக்கத் தாண்டவ தெரிசனம் பார்க்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான்.

ஆதிசேஷனுடைய அளவுகடந்த பக்தியிலீடுப்பட்டு ஆனந்தமடைந்த சர்வேஸ்வரன் மனமகிழ்ந்து அவனேப் பார்த்து "இந்தப் பிரபஞ்சமானது மாய்கையிலுண்டாகி கர்ம பாசத்தாற் கட்டுண்டு சுகம், துக்கம்,மரணம், பயம், சத்துரு இவைகளே யறியாது மண்ணுல் உண்டாகிற கடம்போல் கிரியா சக்தியினுல் உண்டாக்கப் பட்டிருக்கின்றது. நிர்க்குணனுகிய நம்மிடத்திலிருந்து சிருஷ்டி முதலிய கிரியைகள் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன. நமக்கு சகள மென்றும் நிஷ்கள மென்றும் இரண்டு உருவமுண்டு. அவற்றில் சகள வடிவமானது பக்தர்களின் கண்களால் பார்த்தற்கும் தியானிப்பதற்கும் உரியது.

நிஷ்களமானது உருவமற்றதாயும் ஒருவராலும் பார்க்கவும் நினைக்கவும் தியானிக்கவும் அரிதாயுமிருப்பது. மேற்கூறிய சகள நிஷ்களங்களுடன் நமக்கு ஞானவடிவமும் உண்டு. இவ்வித வடிவங்களுள்ள நமக்குப் பராபரமென்றும் பெயர். சிருஷ்டி முதலிய 5 கிருத்தியங்களும் தாண்டவமாகும். நம்மை வேதங்கள் ஆனந்தத் தாண்டவத்தையுடையவன் என்று கூறுகின்றன. இவ்வாறு கூறும் வேதங்களுக்கு நமது தாண்டவத்தின் ஹேதுவும், திக்கும், காலமும் தெரியமாட்டாது. நாம் பூர்வம் தாருகாவனத்தில் தாண்டவம் செய்தபோது அந்தத் தாண்டவ வேகத்தைத் தாங்க முடியாமல் பூமி அதிர்ச்சியடைந்தது. அதனால் அதை ஆரம்பத்திலேயே நிறுத்தி விட்டோம். ஆதிசேஷா! நமது தாரண்டவத்தைத் தாங்கும்படியான விஸ்தாரமான சபை யொன்று பூமியிலிருக்கின்றது. அந்த சபை இந்த பூமியின் இருதயகமலமாகிய சிதம்பர க்ஷேத்திரத்தில் வியாபித்திருக்கின்றது. அங்கே சென்றால் நமது தாண்டவத்தைக் காணலாம். விஷச்சுவாலை யோடு கூடிய பயங்கரமான இந்த ஆயிரம் முகங்களுடனும், நெருப்பைக் கக்குகின்ற இரண்டாயிரம் கண்களுடனும் நீ செல்லலாகாது. அதற்கோர் உபாயம் சொல்லுகிறேன். நீ முன்னொரு காலத்தில் அத்திரி மகாரிஷியின் புதல்வனாகப் பிறந்த காலத்தில் எடுத்த பதஞ்சலி உருவத்துடன் பிலத்துவாரத்தின் வழியாகத் தில்லைவனம் சென்று அங்கு ஏற்கனவே நமது தாண்டவத்தைக் காண ஆசை கொண்டு தவம் செய்து கொண்டிருக்கும் வியாக்கிரபாதருடன் சேர்ந்து கொள்வாயாக. நாம் வந்து உங்களுக்குக் காட்சி கொடுப்போம்" என்று கூறிப் பரமேஸ்வரன்மறைந்தார்.

## அம்பல நாடகம் ஆடிய மகிமை!

இவ்வாறு பதஞ்சலி வியாக்கிரபாதர் இருவரும் சிதம்பரத்தில் தாண்டவதெரிசனம் காண்பதற்காகக் காத்திருக்கையில், ஆனந்தத் தாண்டவத்திற்கு ஈஸ்வரனால் குறிப்பிடப்பட்ட தினமாகிய தை மாதம் குருவாரம்

பூசநட்சத்திரம் அமிர்தசித்தி யோகம் கூடிய சுப தினத்தில் தாண்டவ தெரிசனம் செய்தற்குப் பெருமான் சிதம்பரம் எழுந்தருளப் போகின்ருரென்பதற் காஸ்பதமாக சிவகணங்கள் சிதம்பரம் வந்து சோந்துகொண்டிருந்தன. ஆயிரம் முகங்களையுடைய பானுகம்பனும், பர்வதம் போன்ற கைலிரசிருங்கனும், ஆனந்தமோகிதர்களாக அதிவேகமாய் சிதம்பர க்ஷேத்திரத்தை யடைந்து, சந்திரனை யொத்த வெண் சங்கங்களை ஆரயிம் முகங்களிலும் வைத்து பானுகம்பன் அண்டம் பிளக்கும்படி பிரணவத் தொனியாகிய ஓங்காரத்தை எழுப்பினுன். காந்தர்வ வேதத்தில் மிகுந்த தேர்ச்சியுள்ள கைலிரசிருங்கனென்னும் பாணுரூரன் ஆயிரங் கரங்களால் அடிக்கின்ற மத்தளத் தொனியானது கடலோசையடங்கச் சப்தித்தது. தோற்கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி, கஞ்சக் கருவி, என்னும் ஐவகை நாதங்களும், நான்கு வேதங்களும் கோஷித்தன. சகல தேவர்களும் ரிஷிகளும் அங்கு வந்து கூடினர். உடனே ஆனந்த நடராஜ மூர்த்தி ஞானமயமான சிற்சபையில் எழுந்தருளி ஒரு சரணத்தை ஊன்றி மற்ருெரு சரணத்தைக் குஞ்சிதமாக்கித் தூக்கியும், அத்திருவடிகளிற் சாத்திய திருச்சிலம் பொலிக்கவும், நிர்த்தனம் செய்தருளினர். இவ் வதிசயக்காட்சியைக்கண்டு பிர்மா, விஷ்ணு முதலிய சகல தேவர்களும், திருஸகஸ்ர முனீஸ்வரர்களும், தும்புருநாதர்களும், சித்த வித்தியாதர யக்ஷகின்னரர்களும், காந்தர்வர்களும் அட்டதிக்குப் பாலகர்களும், சிவகணத் தலைவர்களும் உமாபதியின் அனுக்கிரகத்தால் ஞான திருஷ்டிடைந்து சிதாகாச சிற்சபையில் ஆனந்த நிர்த்தனத்தைக் கலக்க மறத் தெரிசித்துப் பரவசமாகி நின்ருர்கள்.

"ஓ! பக்தசிகாமணிகளே! உங்களுக்கு அபீஷ்டமான வரங்களைக் கேளுங்கள்" என்று பகவான் மலர்ந்த முகத்துடன் உரைத்தருளியதைக் கேட்டு பதஞ்சலி வியாக்கிரபாதர்க ளிருவரும் "தேவ தேவனே! எஞ்ஞான்றும், இதே ரூபத்துடனிருந்து எல்லோருக்கும் எக்காலத்திலும் காட்சி கொடுத்தருள வேண்டும்" என்று பிராத்தித்தனர்.

அப்படியே ஆகட்டு மென்று பகவான் அநுக்கிரகித்தார். பின்பு பதஞ்சலி வியாக்கிரபாதர்கள் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து "ஆண்டகையே! 'சிதம்பர ரகசியத்தை' எங்களுக்கு விளக்கியருளல்வேண்டும்" என்று இறைஞ்சினர்.

"பக்தர்களே! லோகோபகரமாக நாம் சிதம்பர ரகசியத்தை வெளியிடுகின்றோம். விமலாகிருதியான நாம் சரீரத்தையுடைய ஆத்மாவினிடத்தில் எவ்வாறு விளங்குகின்றோமோ அவ்விதமே பிரபஞ்ச தேசமாகிய சிதம்பரத்தில் விளையாடுகின்றோம். அந்த ஞானசொரூபத்தை சித்தென்று அறிஞர்கள் கூறுவார்கள். சைதன்ய ரூபமாகிய சித்தினுடைய அந்தரம் எதுவோ அதுவே அம்பரம். ஆதலால் பூமியின் இருதயத்தில் சிதம்பரம் அமைந்திருக்கின்றது. அந்த இடத்திலுள்ள ஞானசபையிலே நாம் நிர்த்தனம் செய்கின்றோம்" என்று திருவாய் மலர்ந்தருளி நடராஜப் பெருமான் மறைந்தார். அது முதல் சகல தேவர்களும் தில்லைவனத்தில் வந்து குடியேறினார்கள்.

"முதலியாரே! இதுதான் ஸ்ரீ நடராஜப் பெருமானுடைய தாண்டவ ரகசியம். உன்போன்ற நாஸ்திகர்கள் இதன் மகிமையை எவ்வாறு அறிந்துகொள்ள முடியும். சர்வலோக சரண்யனான ஸ்ரீமத் நடராஜப் பெருமானுடைய பெருமையைப்பற்றி புராணங்களும், வேதங்களும், உபநிஷத்துகளும் கொண்டாடுகின்றன. அவற்றை யெல்லாம் நீ அறிவையோ?" என்றார் சிவானந்த யோகீஸ்வரர்.

### தாண்டவம்—நிர்வாணக் கூத்தோ?

இந்தப் பெரிய பிரசங்க வியாக்கியானத்தைக் கேட்டு டாஷ் முதலியார் வயிறு குலுங்க நகைத்து "பெரியோரே! தங்களுடைய பேச்சையும் சாமர்த்தியமான வியாக்கியானத்தையும் கேட்டு நான் மகிழ்ச்சியடைந்தேன். ஆனால் சில கேள்விகள் முக்கியமாகக் கேட்கவேண்டியிருக்கின்றன. கோபித்துக் கொள்ளாமல் சாவதானமாகப் பதிலளிக்க வேண்டும். சுவாமிகளே தாருகாவனத்து ரிஷிகளின் கர்வத்தை யடக்கப் பரமசிவன் நிர்வாண மாகப் பிக்ஷாடன

உருவமெடுத்தார். விஷ்ணு மோகனு அவதாரம் எடுத்தார். இவர்களிருவருக்கும் காதலுற்பவிக்க அதன் முடிவாக ஹரி ஹர புத்திரன் பிறந்தார். இந்தக் கதையின் கேவலமான நிலைமையைச் சிறிது ஆராய்வோம். இந்த உலகத்தில் அறிவுள்ள எந்த மனிதனுவது நிர்வாணமாகக் கூத்தாட முன்வருவானு? பகிரங்கமாக முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பதெண்ணுயிரம் ரிஷிகள், முதலியவர்கள் பார்க்க ஈஸ்வரன் சிறிதளவேனும் வெட்கமில்லாமல் நிர்வாணமாக ஆடினுராம். அத்துடனு? ஆண்பாலாகிய விஷ்ணு பெண் வேடந்தரித்திருக்க அவரைக் கண்டு ஆர்வங் கொண்டாராம்! அத்துடனு? அத்தகைய ஆர்வத்தால் அவர் இந்திரியம் நழுவ அதை விஷ்ணு கையில் ஏந்த அப்படியே ஒரு பிள்ளையாயிற்ரும். இந்த ஆபாசமான கதையை நம்புகிற அறிவாளிகளுக்கு ஒரே ஒரு கேள்வி! யோகிஸ்வரரே! சர்வலோக நாயகனுகிய பரமசிவமே மன்மதாவஸ்தையால் தாக்கப்பட்டு அதனுல் அறிவிழந்து; பெண் வேடம் தரித்த ஆண்பிள்ளையைக்கண்டு மோகித்து இந்திரிய நிக்கிரகம் செய்தாரென்ருல் இவ்வளவு கேவலமான ஒரு மனிதன் ஈஸ்வரனுகவும் சர்வஜீவன்களுக்கும் அதிபனுகவும் எங்ஙனமிருக்கமுடியும்? இதிலிருந்து ஈஸ்வரன் பெரியவரா? அவரை அறிவிழக்கச்செய்த மன்மதன் பெரியவனு? இவ்வாறு நிர்வாணமாகச் சென்ற சிவன் தாருகாவனம் சென்று ரிஷிபத்தினிகளுடன் சரச சல்லாபமாயிருந்து அவர்கள் கற்பை யழித்தாராம். அச்சமயம் தாருகாவனரிஷிகள் பெண் வேடம்தரித்த மகாவிஷ்ணுவைக்கண்டு மோகித்துத்தங்களை மறந்து நிர்வாணமாக நின்ருர்களாம். அந்த ரிஷிகளின் எதிரிலேயே சிவன் அந்த ரிஷிபத்தினிகளிடம் நிர்வாணமாக நின்று புணர்ச்சி முதலிய சல்லாபங்கள் செய்ததைப்பார்த்து ரிஷிகள் கோபமடைந்தார்களாம். மனதினுலும் நிர்மாணிக்க முடியாத இத்தகைய ஒரு அநீதமான ஆபாசச்செய்கையை ஈஸ்வரன் செய்தாரென்ருல் அவரை எப்படி சர்வலோக நாயகன் என்று கூறலாம். இவ்வாறு எல்லோரும் ஒரே அடியாக நிர்வாணமாக நின்ருர்களென்ருல் இவர்களெல்லோரும்

மனிதர்களா ? அல்லது மிருகங்களா ? ஈஸ்வரன் நிர்வாண மாகப் பல பெண்களுடன் சரசசல்லாபமாக ஆடிய நிர்வாணக் கூத்திற்குத்தான் தாண்டவ மெனப்பெயரோ? இந்தத் தாண்டவ தெரிசனத்தைத்தான் முப்பத்து முக்கோடி தேவர்களும் கண்டு பிர்மித்தார்களோ ? அந்த தேவர்கள் அறிவுடையோர்களா யிருந்தால் இத்தகைய அநாகரீகமான செய்கையை எங்கும் கண்டதில்லையே என்று ஒருக்கால் பிர்மித்திருக்கலாம்.

யோகீஸ்வரரே ! தாருகாவனத்தில் ஈஸ்வரன் ஆடிய கதை ஒருபுற மிருக்கட்டும். ஆதிசேஷன் மகா விஷ்ணுவினால் தாண்டவ தெரிசன மகத்துவத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு அதைத் தான் தெரிசிப்பதற்காக விஷ்ணுவினிடம் தனக்குப் பதிலாகத் தன்மகனை விஷ்ணுவிற்குப் பணிசெய்யும்படி விட்டு விட்டுத் தவம் செய்யப் போன கதையைச் சிறிது ஆராய்வோம். அதற்கு முன் ஆதிசேஷனைப் பற்றியே ஒரு பெரும் சந்தேகம் நிகழ்கின்றது. இந்தப் பூவுலகத்தைத் தனது ஆயிரம் தலைகளின்மீது ஆதிசேஷன் தாங்கிக் கொண்டிருக்கின்றானென்பது ஒரு கதை. மகாவிஷ்ணுவின் படுக்கையாக ஆதிஷேன் திருப்பாற் கடலின் மத்தியிலிருக்கின்றா னென்பது மற்றோர் கதை. ஆதிசேஷன் பூமியைத் தாங்குவது எப்போது? மகா விஷ்ணுவின் படுக்கையாக அமைந்திருப்பது எப்போது ? இவை இரண்டையும் ஏககாலத்தில் செய்வதாகவே வைத்துக்கொள்வோம். திருப்பாற் கடலின் மத்தியிலல்லவா விஷ்ணு சேஷசயனத்தில் அமர்ந்திருக்கின்றார் ? அப்படி யானால் அந்தத் திருப்பாற்கடல் எங்கே யிருக்கின்றது ? ஆதிசேஷன் எந்த இடத்தை ஆதாரமாகக்கொண்டு நின்று இப் பூமண்டலத்தைத் தாங்குகின்றான்? யோகீஸ்வரரே! இந்தக் கேள்விகட்கெல்லாம் தாங்கள் ஒருவாறு சமாதானம் சொல்ல முற்பட்டாலும் நான் கேட்கப்போகின்ற இந்த ஒரு கேள்விக்கு மட்டில் பதில் சொல்ல முடியாது. தாண்டவ தரிசனம் பார்க்க—அருள்பெற ஆதிசேஷன் கைலயங்கிரி மலைச் சார்பிற்குத் தவஞ் செய்யப்போன காலத்தில் இந்த

பூமியை யாரைத் தாங்கும்படி ஏற்பாடு செய்துவிட்டுப் போனுனே தெரியவில்லை. இந்தக் கேள்விக்கு எந்த சாஸ்திரவாதியும் பதிலளிக்க முடியாது.

கிரேக்கர் புராணக்குப்பையில் இதைவிட மிகவும் வேடிக்கையான ஒரு கதை இருக்கின்றது. அட்லாஸ் (Atlas) என்ற அரக்கன் ஒருவன் இந்த பூமியில் நின்று கொண்டு தன் முதுகின்மீது ஆகாயத்தைத் தாங்கிக்கொண்டிருக்கின்ருனும். இது அவனுக்குக் கடவுளின் தலைவராகிய "ஸியஸ்" (Zeus) என்பவரால் ஏற்படுத்தப்பட்ட கட்டளை. அனேக வருஷங்களாக ஆகாயத்தைச் சுமந்து நின்றதால் அட்லாஸுக்கு முதுகு வலி ஏற்பட்டு விட்டபடியால் அதை யார் தலையிலாவது சுமத்திவிடச் சமயம் பார்த்துக்கொண்டிருந்து மிகத்தந்திரமாக ஹேர்குலிஸ், (Herculis) என்ற வீரன் முதுகில் ஆகாயத்தைச் சுமத்திவிட்டதாக கிரேக்கர்களின் புராணம் ஒன்று கூறுகின்றது. ஆதிசேஷன் பூமியைச் சுமந்து நிற்கின்ற கதையும், அட்லாஸ் ஆகாயத்தைச் சுமந்து நிற்கின்ற, கதையும் ஏறக்குறைய கற்பனையில் ஒத்திருக்கின்றன. ஆனுல் இந்திய புராண கர்த்தரைவிட கிரேக்க புராண கர்த்தர்கள் சிறிது அறிவிலும் கற்பனைத் திறத்திலும் உயர்ந்தவர்களகவே இருக்கின்ருகள். தனது ஆகாயச்சுமையை இறக்குவதற்கு அட்லாஸ் வேருெரு ஆள் பார்த்துக் கொண்டிருந்திருக்கின்ருன். ஆனுல் ஆதிசேஷனே தாண்டவ தெரிசனம் பார்ப்பதன் நிமித்தம் தவம் செய்யப்போன காலத்தில் பூமியைத் தாங்குதற்கு மாற்ருள் பிடித்ததாகத் தெரியவில்லை. ஆதிசேஷன் தவம் செய்யப் போயிருந்த காலத்தில் இந்தப்பூமியை யார் தாங்கிக்கொண்டிருந்தார்களோ? பூமியைத்தாங்குதற்கு மாற்ருள் பிடிக்காமற் போய்விட்டபோதிலும் மகாவிஷ்ணுவின் படுக்கைக்கு மட்டில் தன் மகனை நியமித்துப்போனு னென்று புராணம் கூறுகின்றது. மற்ருேர் வேடிக்கை. மகாவிஷ்ணுவும் லட்சுமியும் படுத்து நித்திரை செய்வதற்குப் படுக்கை யகப்படவில்லையா? விஷமுச்சுவிட்டுக் கொண்டிருக்கின்ற பாம்பு மீது தானு

படுத்துறங்க வேண்டும்? நாகரீகமான ஒரு மனிதன் பாம்பின்மீது படுத்துறங்குவாஞ?

பிர்மா விஷ்ணு ருத்திரன் இம்முவர்களில் யார்பெரியவர் என்று புராணங்கள் ஒன்றிற் கொன்று சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றன. பிர்மாவும் விஷ்ணுவும் சிவபெருமானுடைய தாண்டவ தெரிசனத்திற்காக வந்து காத்துக் கொண்டிருந்ததாகவும் அதை நினைத்த மாத்திரத்தில் பக்தி மேலிட்டால் பரவசமுற்றதாகவும் சிதம்பர புராணத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்த்தால் வீர வைஷ்ணவர்களும் பட்டைநாமம் தீட்டிக்கொள்ளும் ஆழ்வாராதிகளும் பிரமாதமாகச் சண்டைக்கு வந்து விடமாட்டார்களா?

ஆசிஷேஞகிய பதஞ்சலியும், புலி மனிதஞகிய வியாக்கிரபாதரும் கண்டு தரிசிப்பதற்காக மறுபடியும் சிதம்பரத்தில் சிவபெருமான் நிர்த்தனம் செய்தாராகையால் தில்லை நடராஜர் என்னும் பெயரை யடைந்தார். இதுதான் நடராஜர் ஆடிய கதை. இதைப்பற்றி இவ்வளவு தூரம் நான் தர்க்கம் செய்ததற்காக சாமிகள் என்னை நாஸ்திகனென்று சொல்லலாம். உண்மைத் தத்துவத்தை யாரும் எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய காலம் வந்து விட்டது. உங்களுடைய குருட்டுப் புராண வியாக்கியானம் இனிச் செல்லமாட்டாது. சாமிகளெல்லாம் மலையேறி விட்டார்கள். இன்னும் ஏதாவது சிதம்பரத்தைப்பற்றித் தங்களால் சொல்லக் கூடிய கதை இருக்கின்றதா?'' என்று கேட்டார் டாஷ் முதலியார்.

## தீட்சதர்களின் பெருமை.

"அப்பா! உன் தந்தையார் பெரிய சிவபக்தர். அவர் பிள்ளையாகிய நீயோ நாஸ்திக வாதியாக இருக்கின்றனை. நான் பின்னல் சொல்லக் கூடியவற்றைக் கேட்டாவது உனது கொள்கையைத் திருத்திக் கொள்வாயாக.

"சிதம்பரம் நடராஜப் பெருமானுடைய ஆலயத்தில் பூஜை நைவேத்தியங்கள் செய்துகொண்டு அதற்குக் கர்த்தர்களாக இருக்கப்பட்டவர்களுக்கு திருஸகஸ்ர முனிவர்.

கள் எனப்பெயர். பரமேஸ்வரர் நந்தி தேவருக்கெடுத் துரைத்த சிதம்பர மகாத்மியத்தில் திருஸகஸ்ர முனீஸ்வரர் களின் பெருமையைப் பற்றி மிகவும் விரிவாகச் சொல்லப் பட்டிருக்கின்றது—அமிர்தம் போன்ற குணமும், சரஸ் வதி போன்ற வித்தைப் பெருக்கும் உடையவர்கள். வேதத் தியயனஞ் செய்வதிற் பிரம்ம தேவருக்குச் சமானமானவர் கள். கணக்கற்ற யாகங்களைச் செய்பவர்கள். பக்தியுடன் ஸ்ரீமத் நடராஜப் பெருமானைப் பூஜிப்பவர்கள். தர்ம சொரூ பிகளாகிய திருஸகஸ்ர முனிவர்களின் பெருமையை அள விட முடியாது. இவர்களை நினைத்த மாத்திரத்தில் பாவங் களெல்லாம் விலகி விடுகின்றன. தங்கள் சக்தியானுக்கிர கத்தால் சிதம்பர க்ஷேத்திரத்தை இரட்சிக் கின்றார்கள். வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத சிதம்பர மகத்துவத்தை அவர்கள்தான் அறிவார்கள். சகல சம்பத்துக்கும் ஆஸ்பத மாகிய விபூதியின் மகாத்மியத்தையும், ஸ்ரீ நடராஜப் பெரு மானது பூஜையின் நியமனங்களையும் திருஸகஸ்ர முனீஸ் வரர்கள் எனப்பட்ட தீட்சதர்கள் நன்குணர்ந்தவர்கள். ஒப்பிலா மகிமை பொருந்திய மூலலிங்கத்தில் ஈஸ்வரன் வசிக் கும் ரகசியம் தீட்சதர்கட்கு மட்டும்தான் தெரியும். அவர் களைத் தரிசித்தால் சகல பீடைகளும் ஒழியும். விபூதியால் அலங்கரிக்கப்பட்ட அவர்கள் திருமேனியைக் கண்டு வணங்கினல் சகல க்ஷேத்திரங்களையும் பணிந்த பலன் கிடைக்கும். இத்தகைய உத்தமோத்தமர்களாகிய தீட்சத முனிவர்களால் பூஜிக்கப்பட்ட தில்லையை உன் அறியாமை யால் இகழாதே'' என்றார் சிவானந்த யோகீஸ்வரர்.

“யோகீஸ்வரரே! திருஸகஸ்ர முனிவர்கள் எனப்பட்ட தீட்சதர்களைப்பற்றித் தாங்கள் கூறியது முன் ஒரு காலத் தில் உண்மையாக இருந்திருக்கலாம். தில்லை மூவாயிரம் என்ற காலமெல்லாம் மறைந்து விட்டது. தற்சமயம் கணக்கிட்டால் குழந்தை குட்டிகள் உள்பட 200, 250 ஆசாமி கூட இல்லை. சிதம்பர மகாத்மியத்தில் திருஸகஸ்ர முனீஸ்வரர்களைப்பற்றிக் கூறப்பட்டிருக்கும் பெருமைகளில் தற்கால திருஸகஸ்ர முனீஸ்வரர்களாகிய தீட்சதர்கட்கு

ஏதாவது—ஒன்றிரண்டாவது பொருந்தியிருக்குமா ? திரு ஸகஸ்ர முனிவர்கள் முற்காலத்தில் கணக்கற்ற யாகங்கள் செய்ததாகச் சொன்னீர்களே ! அது அதிசயமல்ல. தற்காலத்திலும் கணக்கற்ற யாகங்கள் தீட்சதர்களால் செய்யப்படுகின்றன. நாகரீக தீட்சதர்கள் யாகம் என்ற பெயரில்லாமலே ஸோம பானமும், மாமிசமும் புசித்து வருகின்றனர். 20-ம் நூற்றுண்டில் ஜெனித்திருக்கும் திருஸகஸ்ர முனீஸ்வரர்கள் அநாகரீகமான ஸோம பானத்தை விரும்புவதில்லை. தேவாமிர்தத்திற் கொப்பானதும், மகா பரிசுத்தமானதும், கையினுல் தொடப்படாமல் செய்யப்பட்டு சீசாக்களில் அடைத்து வருவதுமாகிய சீமை வகையருக்களைச் சாப்பிடுகின்றுர்கள். அம்பிகைக்குச் சத்தி பூஜை செய்யும்போது கள் சாராயம் முதலியவற்றை வைத்துப் படைக்கவேண்டு மென்பது ஆகமவிதி. இந்தக் காலத்தில் சத்தி பூஜைக்குக் கள் முதலிய மட்ட வஸ்துகளுக்குப் பதிலாக விஸ்கி, பிராந்தி, ஒயின் முதலிய உயர்ந்த பான வர்க்கங்கள் வைத்து நைவேத்தியம் செய்யப்படுகின்றன. தற்கால திருஸகஸ்ர முனிவர்கட்கு யாகத்தின் பெயரைச் சொல்லி ஸோம பானமும், மாமிஸ பட்சணமும் செய்ய வேண்டிய அவசியமேயில்லை. அநேகர் திரேக செளக்யத்திற்காக அன்றுட உபயோகமாக வழக்கப்படுத்திக் கொண்டதுடன்; அளவுக்கு மிஞ்சிப் புசிக்கப்படுகின்ற பிரசாத வகைகளைச் சீரணிப்பதற்காக சீமை பானங்கள் மிகவும் இன்றியமையாத சாதனமாக இருப்பதாகவும் அபிப்பிராயப் படுகின்றுர்கள்.இவ்வாறு கணக்கற்ற அக்கிரமங்கள் திருஸகஸ்ர முனிவர்களால் செய்யப்படுகின்றன. முற்காலத்திலும், பிற்காலத்திலும், தங்கள் சத்தியானுக் கிரகத்தால் சிதம்பர க்ஷேத்திரத்தை தீட்சதர்கள் ரட்சிக்கின்றுர்கள் என்று சிதம்பர மகாத்மியத்தில் கூறப்பட்டிருப்பது மட்டும் உண்மையே. தீட்சதர்கள் தங்கள் வாக்கு வன்மையினுலும், மனம், வாக்கு, காயம் என்று சொல்லப்பட்ட திரிகாணசுத்தியாலும் 'தங்களுக்குரியவற்றை யெல்லாம் சிறிதளவேனும் மனக்கிலேசமின்றித் தங்கள் அன்பர்கட்

கும் அடியவர்கட்கும் கொடுப்பது' என்னும் தாராள நோக்கத்தினாலும்இன்று வரையில் சிதம்பர க்ஷேத்திரத்தை இரட்சித்து வருகின்றார்கள் என்பதைப் பலர் அறிவர். கடவுள் என்ற நம்பிக்கையோ, பக்தியோ, மருந்திற்குமில்லாத சில கனவான்கள், ஓப்பன்கோட், காலர், டை உள்பட ஸ்ரீ நடராஜர் தெரிசனத்திற்கு வருவதை நாம் எத்தனையோ முறை பார்த்திருக்கின்றோம். இத்தகைய கனவான்கள் தில்லை நடராஜரைப் பார்க்க வருகின்றார்களா? சிவகாம சுந்தரியைப் பார்க்க வருகின்றார்களா? அல்லது திருமூல நாதரைப் பார்க்க வருகின்றார்களா? ஸ்ரீ நடராஜப்பெருமானுடைய பெயரை ஆதாரமாக வைத்துக்கொண்டு சில காம சுந்தரிகளிடம் திட்சை பெறுவதற்காகவே சிதம்பரம் வருகின்றார்கள் என்பது பலர் அறிந்த விஷயம்.

## பக்தியும்—வரப்பிரசாதமும் தபாலில்!

'மதிமோச விளக்கம்' என்ற புத்தகத்தில் தில்லையிலுள்ள தீட்சதர்கள் தபால் மூலம் விபூதிப் பிரசாதம் அனுப்பிக் கட்டளைப் பணம் பெறுகிற விநோதத்தை ஒரு மோசமாக வகுத்தெழுதப்பட்டிருப்பதை அனேகர் படித்திருக்கலாம். பிரதோஷக் கட்டளை, சோமவாரக் கட்டளை, சுக்கிர வாரக்கட்டளை என ஒவ்வொரு கிழமைக்கும் கட்டளைகளிருக்கின்றன. இந்தக் கட்டளைகளை ஏற்படுத்திய கனவான்கள் மணியார்டர் மூலம் தீட்சதர்கட்குப் பணம் அனுப்பி விடுவார்கள். இந்தப்பணத்திற்குப் பதிலாகச் சிறிது விபூதி குங்குமம் பொட்டலமாகக் கட்டித் தபாலிலேயே அனுப்பப்படும். ஆங்கில அரசாங்கத்தாரின் கருணையால் ஏற்பட்ட தபால் மூலமாக ஸ்ரீமத் நடராஜப் பெருமான் மீதுள்ள "பக்தி" மணியார்டர் செய்யப்பட, மறுதபாலில் பெருமானுடைய வரப்பிரசாதமாகிய விபூதி குங்குமம் பார்ஸல்,செய்யப்படுவதால்,இந்த உபகாரத்திற்காக ஸ்ரீமத் நடராஜப் பெருமானும் அவருடைய பக்தர்களும் தபால் இலாக்கா அதிகாரிகளுக்கு வந்தனம் செய்யவேண்டும்.

" காலத்திற்கேற்ற கோலம்" என்றபடி இந்தக் காலத்திற்கேற்றவாறு ஸ்ரீமத் நடராஜப் பெருமானுடைய ஆகாராதிகளும் செய்யப்படுகின்றன. வட இந்தியாவிலிருந்து வரக்கூடிய செல்வந்தர்களாகிய யாத்திரை வாசிகளைக் கொண்டுஹல்லவா, குலாப்ஜான், கேஸரிபாத், முதலியவைகள் நடராஜப்பெருமானுக்குநைவேத்தியம்செய்யப்படுகின்றன. விடியற்காலையில் செய்யப்படும் பால் நைவேத்தியத்தை இட்டிலி, காப்பி, தோசை, பூரி, உருளைக்கிழங்கு, நைவேத்தியமாக மாற்றிவிட்டால் நல்லது என்று சில தீட்சதர்கள் அபிப்பிராயப்படுகிறார்களாம். தில்லை மாகாளிக்கு மிகவும் விலையுயர்ந்த சீமைபானங்கள் வைத்து ஆராதிக்கப்படுவதாகவும் பிரஸ்தாபம். தீட்சதர்கள் பல வழியிலும் முன்னேற்றமடைவதற்குப் பலவிதமான வசதிகளும் அவர்களுக்கு அமைந்திருக்கின்றன. ஆதலால் சுவாமிகளே! தாங்கள் எவ்வளவு பேசினாலும் தங்கள் கட்சியை ஸ்தாபிக்க முடியாது. சிதம்பர ரகசியத்தைப் பிரதியட்சமாகக் கண்ட என் போன்றவர்கள் அதை எப்படி மறக்க முடியும். அந்த ரகசியத்தின் மேன்மையானது என்னுடைய ஆத்ம சக்தியையே அடியோடு கிரகித்துவிட்டது. எனக்கு வேறு சிந்தையில்லை. இவ்வாறு என் மனம் ஏகாக்கிரசித்தியி லீடுபட்டுவிட்டபடியால் தங்கள் போன்ற யோகீஸ்வரரைவிட எத்தனையோ மடங்கு நிற்குணசொரூபியாக இருக்கிறேன். பதஞ்சலி வியாக்கிரபாதர்கள் கண்ட தெரிசனம் பிரமாதமானதல்ல.நான் கண்டதே பெரிய காட்சி" என்றார் டாஷ் முதலியார்.

நாஸ்திகவாதியாகிய முதலியார் இவ்வாறு சொன்னதினால் அவர் கண்ட அதிசயத்தையறிய ஆசைப்பட்டு யோகீஸ்வரர் அந்த அதிசயம் என்னவென்று வினவினார்.

"பெரியோரே! நான் சிதம்பரம் சென்றிருந்த காலத்தில் முதலில் நடராஜப் பெருமானுடைய தெரிசனம் கிடைத்தது, அதன்பின் அர்த்த ராத்திரியில் தில்லைவாழ் அந்தணர் வைப்பாட்டி வீட்டில் அமிர்த பானமும் ஆனந்த

தெரிச—'' என்று கூறுகையில் சாமியார் இடைமறித்து—"சிவ! சிவ! போதும் போதும்; உனது அதிகப்பிரசங்கத்தை இத்துடன் நிறுத்திக்கொள்'' என்று காதுகளைக் கெட்டியாக மூடிக்கொண்டு, "முதலியாரே! சிதம்பர மகாத்மியத்தைப் பற்றிப் பின்னும் கேட்பாயாக, விதண்டாவாதம்செய்யாதே'' என்று மறுபடியும் புராணப் பிரசங்கம் செய்யத் தொடங்கினர்.

## மாத்தியானந்தர்—புலி மனிதன்!

**மாத்தியானந்தர்** என்னும் முனிவர் இளமையிலேயே உலகப்பற்றனைத்தையும் வெறுத்துத் தன் தந்தையால் தில்லை வனத்தின் பெருமையைப்பற்றித் தெரிந்துகொண்டு தவம் செய்வதற்காகத் தில்லைவனம் வந்து சேர்ந்தார். அந்த வனத்தின் நடுவே அழிவில்லாத ஆத்ம சுகத்திற் கேதுவாகிய சிவகங்கையில் ஸ்நானம் செய்து, அதன் தென்கரை வழியாக மெல்ல நடந்து எல்லா உலகங்களுக்கும் மூல காரணமாயிருக்கின்ற மூலஸ்தானத்தைக் கண்டு அதன் நடுவே விளங்குகின்ற பரமசிவத்தைத் தெரிசித்து அடங்காத ஆனந்தத்துடன்; அது முதல் பக்திப்பிரபாவத்தில் ஈடுபட்டு அந்த வனத்திலேயே ஒரு பர்னக சாலையை அமைத்துச் சிவலிங்கப் பெருமானை ஆத்ம சுத்தியுடன் பூஜித்து வந்தனர். விடியற்காலத்தில் சிவ பூசைக்குரிய புஷ்பங்களை எடுப்பதற்கு மரங்களின் மீது ஏறும்போது பனியினல் கால்வழுக்குதலையும், இருளில் குற்றமுள்ள புஷ்பங்களைக் கண்டுபிடித்தற்குக் கண்பார்வை தெரியாமலிருப்பதையும், யோசித்து வருந்தி இக்குறைகளை நீக்கிக் கொள்வதற்காக ஈஸ்வரனைக் குறித்துத் தவம் செய்தார். இவரது தவத்தைக் கண்டு வியந்து சர்வேஸ்வரன் பிராப்தமாகி அவருக்கு என்ன வரம் வேண்டுமென்று கேட்க, மாத்தியானந்தர் மனமகிழ்ந்து "ஆண்டகையே! தேவரீரது பூசையின் பொருட்டு மலர்கள் எடுக்கப் பனியால் நிறைந்த மரங்களிலேறும்போது வழுக்காதிருக்க அடியேனுடைய கைகளும் கால்களும் புலி

யைப்போல் வலுவான நகப்பற்றுண்டாகவும், இருட்டில் குற்றமற்ற புஷபங்களைப் பார்த்தெடுப்பதற்காக ஒளிபொருந்திய கண்கள் அமையவும் அனுக்கிரகித்தல் வேண்டும்'' எனப் பிரார்த்தித்துக் கொண்டார். ஈசன் அவ்விதமே அருள்பாலிக்க. அன்றுமுதல் மாத்தியானந்தர் வியாக்கிர உருவம்பெற்று வியாக்கிரபாதர் என்று உலகத்தோரால் புகழ்ந்தோதப்பட்டனர்.

இங்ஙனம் வியாக்கிரபாதர் தில்லையம்பதியில் மகா பக்தி சிரத்தையுடன் சிவபூஜை செய்துவருவதை யறிந்து அவர் தந்தை சந்தோஷப்பட்டு மகனை கிரகஸ்தனுக்க விரும்பி நற்குணமும், நல்லழகும் வாய்ந்தவளான வசிஷ்டரின் தங்கையை வியாக்கிரபாதருக்கு மணம்செய்து வைத்தார். தன் மனைவியுடன் இல்லற தருமம் வழுவாது வியாக்கிரபாதர் வசித்து வருகையில் அவருக்கு ஒரு ஆண்மகவு பிறக்க அதற்கு உபமன்யு எனப் பெயரிட்டார். அக்குழந்தை சகல சம்பத்துக்களுடன் வசிஷ்டர் ஆச்சிரமத்திலேயே அமிர்தத்திலும் இனிமையான காமதேனுவின் பாலைக்குடித்து வளர்ந்து வந்தது. வியாக்கிரபாதர் ஓர் தினம் குழந்தையைத் தமது ஆச்சிரமத்திற்கு அழைத்து வந்தார். தெய்வீகமான காமதேனுவின் பாலைக் குடித்து வளர்ந்து வந்த குழந்தையானது வியாக்கிரபாதர் ஆச்சிரமத்தில் காய் கனி கிழங்குகளால் தயார் செய்யப்பட்ட கஞ்சியைக் குடிக்க மறுத்துவிட்டது. காமதேனுவின் பாலை நினைத்துக்கொண்டு குழந்தை பசிப்பிணியால் மெலிந்து வருந்துவதைக்கண்டு வியாக்கிரபாதர் 'பால் கறந்து கொடுப்பதற்கு மாடு வாங்க நாம் பணத்திற்கெங்கே போவோம்' எனத்திகைத்து, குழந்தையைக்கொண்டுபோய் ஸ்ரீமூலநாதரின் சன்னிதானத்தில் விட்டு வந்தனர். இதைக்கண்ட ஸ்ரீமூலநாதர் குழந்தையின் பசியை நிவர்த்திப்பதற்காகத் திருப்பாற்கடலை வரவழைத்தனர். குழந்தையும் பாற் கடலைப் பருகிக்கொண்டு ஆனந்தமாய் வளர்ந்து வந்தது. பின்பு வியாக்கிரபாதர் ஸ்ரீமூலர் சன்னிதியிலேயே ஐம்புலன்களையும் அடக்கிக் கடூரமான தவம் செய்து

கடைசியாகத் தாண்டவ தெரிசனக் காட்சியைப் பார்த்துப் பரமானந்த மடைந்தனர்.

## சிம்மவர்மன் பிணிநீங்கிய அதிசயம்.

நித்தியானந்தத் தாண்டவ தரிசனங்கண்டு வியாக்கிரபாதர் மகிழ்ச்சியுடன் தில்லையம்பதியில் வசித்து வருகையில் சிம்மவர்மன் என்னும் அரசன் சிதம்பரம் வந்து ஸ்ரீ நடராஜர் ஆலயம் முதலியவற்றை நிர்மாணம் செய்த வரலாற்றை விபரமாகத் தெரிவிக்கின்றேன். வைவஸ்வத மனு வம்சத்தைச் சேர்ந்த ஐந்தாவது மனுவாகிய உலகேந்திரனுடைய மூத்த புதல்வனாகிய சிம்மவர்மன் என்பவன் அதி பால்யத்திலேயே குட்டநோயினால் பாதிக்கப்பட்டதினால் வருந்தி இவ்வுலக ஆசைகளை வெறுத்துத் தவம்செய்வதில் விருப்பமுற்று ராச்சியபாரத்தைத் தன் தம்பிகளிடம் ஒப்புவிக்கும்படி சொல்லித் தன் பெற்றோர்களிடம் விடைபெற்றுக்கொண்டு தேச சஞ்சாரம் செய்துக் கடைசியாகத் தில்லைவனம் வந்து சேர்ந்தான். மனித சஞ்சாரமற்ற அத்தில்லைவனத்தில் சிம்மவர்மன் ஏகாங்கியாகச் சுற்றித் திரிகையில் தற்செயலாய் ஒரு வேடனைச் சந்தித்து "இந்த வனத்தில் என்ன விசேஷம்"? என்று கேட்டான்.

"இந்த வனத்தின் நடுவில் சுவர்ணமய மான தாமரைகளை யுடைய ஒரு தடாகமிருக்கின்றது. அதன் தென்கரையில் புலியைப்போன்ற உருவமுள்ள ஒரு மனிதன் உட்கார்ந்த வண்ணமாக நித்திரை செய்துகொண்டிருக்கின்றான். ஓர் தினம் அவனைப்பார்த்து நான் பயந்து திரும்பி வந்து விட்டேன்" என்றான் வேடன்.

இதைக்கேட்ட சிம்மவர்மன் சந்தோஷித்து யாரோ பெரியவர் தவம் செய்துகொண்டிருக்க வேண்டுமென நினைத்து வேடனை வழிகாட்டும்படிச் சொல்லி வியாக்கிரபாதர் நிஷ்டையிலிருக்கும் இடத்தை யடைந்தான். தபோநிதியாகிய வியாக்கிரபாதர் ஞானதிருஷ்டியால் சிம்மவர்மன் வந்திருப்பதாக அறிந்துகொண்டு கண் விழித்துப் பார்த்

துத் தம்மை வணங்கி நிற்கும் சிம்மவர்மனை ஆசீர்வதித்தார். சிம்மவர்மன் தன் வரலாற்றை விபரமாகத் தெரிவித்துக் கொண்டான். சிம்மவர்மனைத் தமது ஆச்சிரமத்திலிருக்கும்படிச் செய்து வியாக்கிரபாதர் பதஞ்சலி மகாமுனிவருடன் சபைக்குச் சென்று சிம்மவர்மனுடைய வருகையைப்பற்றிச் சன்னிதானத்தில் தெரிவித்துக்கொண்டார். இதைக்கேட்ட கர்த்தன் திருவுளங்கனிந்து "தவ சிரேஷ்டர்களே! அவ்வரசனது வருகையை நாம் அறிவோம். அவனைச் சிவகங்கையில் ஸ்னானம் செய்வித்து நம் சன்னிதானத்திற்கு அழைத்துவாருங்கள். அதன் பின் நமது சக்தியின் விசித்திர கதியைக் காணலாம்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அதன்படி பதஞ்சலி வியாக்கிரபாதர்கள் சிம்மவர்மனை சிவகங்கையில் ஸ்னானம்செய்விக்க அழைத்துச் சென்றார்கள். சிம்மவர்மன் மிகுந்த மகிழ்ச்சி யடைந்து உத்தமர்களின் சேர்க்கையால் கிடைத்த பலனைப் புகழ்ந்து சிவகங்கையில் இறங்கி ஸ்னானம் செய்து எழுந்திருக்கையில் குட்ட நோயொழிந்து கோடி சூரியப் பிரகாசம் பொருந்திய தங்கமயமான சரீரத்துடன் விளங்குவதைக் கண்டு முனிவர்கள் வியந்து அன்றுமுதல் அவனுக்கு இரண்யவர்மன் எனப் பெயரிட்டார்கள். பின்பு வியாக்கிரபாதர் இரண்யவர்மனுக்குக் குறைவற்ற ஆனந்தத்திற்குக் காரணமாகிய பஞ்சாட்சரத்தை உபதேசித்து ஞானிகளும் காண்பதற்கரியதாயிருக்கப்பட்ட சிதம்பர மகா சபையைக் காண்பித்தார். சிம்மவர்மன் கருணாநிதியாகிய பகவானுடைய சச்சிதானந்தத் தாண்டவ தெரிசனங்கண்டு தன்னை மறந்து நின்றான். அன்று முதல் இரண்யவர்மன் அன்றாடம் நடராஜப் பெருமானுடைய தாண்டவ தெரிசனத்தைப் பார்த்துக் களித்துக் கொண்டு வியாக்கிரபாதருடன் சிறிதுகாலம் வசித்துவருகையில் ஓர் தினம் வியாக்கிரபாதர் இரண்யவர்மனுக்கு க்ஷேத்திர மகாத்மியத்தை எடுத்துச் சொல்லத் தொடங்கினார்.

"ஓ! அரசனே! அம்பிகாபதியான சர்வேஸ்வரன் எங்கும் நிறைந்திருப்பினும் ஒருவர் கண்ணிலும் அகப்படார்.

அப்படியிருந்தும் இந்த க்ஷேத்திரத்தில் மட்டும் கர்ம நேத்திரங்களுக்குத் தெரியும்படி நிர்த்தனம் செய்கின்றார். பூலோகத்திலுள்ள 68 முக்கியமான சிவ க்ஷேத்திரங்களுள் 6 க்ஷேத்திரங்கள் பிரதானமானவை. அவற்றுள் புண்டரீகபுரம், காசி, கமலாலயம் இவை மூன்றும் மிக மேலானவை என்பது பெரியார் கொள்கை. இம்மூன்றில் புண்டரீகபுரம் என்னும் சிதம்பரத்தை தெரிசிப்பதாலும், கமலாலயத்தில் பிறப்பதாலும், காசியிலிறப்பதாலும் முத்தி யடைவதாகப் பிரமாணம். ஆதலால் இந்த க்ஷேத்திரத்தை தரிசித்த மாத்திரத்திலே முத்தி கிடைக்கின்றது. சிதம்பரத்திற்கு மேலாகிய க்ஷேத்திரமும், பஞ்சாட்சரத்திற்கு மேலான மந்திரமும், நடேசனுக்கு மேலான தெய்வமும் வேறு எங்குமில்லை. ஆதலால் ஓ! அரசனே நீ மனு வம்சத்திற் பிறந்ததுடன் ஆனந்தத்தாண்டவ தெரிசனங் காணப்பெற்றமையால் தனியனுயினை'' என்று க்ஷேத்திர மகிமையைச் சொல்லி வருகையில் ஆகாயத்திலிருந்து ஒரு தேஜஸ் இறங்கி வருவதைக் கண்டார்கள். அவ்வொளியைப் பார்க்கச் சக்தியற்றவர்களாக இது என்ன ஆச்சர்யமென்று ஸ்தம்பித்திருக்கையில் இரண்யவர்மனுடைய குருவாகிய வசிஷ்டர் வருவதையறிந்து இரண்யவர்மன் சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்க, வியாக்கிரபாதர் எதிர்கொண்டழைத்து வந்தனுபசாரங்கள் செய்தார். வசிஷ்டர் இரண்யவர்மனை ஆசீர்வதித்து வியாக்கிரபாதர் முதலியவர்களது க்ஷேமங்களை விசாரித்துப் பின் சிவ கங்கையில் ஸ்னனம் செய்து சிற்சபையிற் சென்று நடராஜப் பெருமானைத் தெரிசித்து வியாக்கிரபாதர் ஆச்சிரமத்தில் தங்கினர்.

இரண்டொரு நாள் கழிந்த பின் வசிஷ்டர் இரண்யவர்மனைப் பார்த்து "உன் பிதா மிகுந்த விருத்தாப்பியத்தை அடைந்துவிட்டபடியால் ராச்சியத்தை ஒப்புக்கொள்ள வரவேண்டும். உன் சகோதரர்கள் சிறுவர்களாயிருப்பதால் ராச்சியபாரத்தை வகித்து நடத்தச் சக்தி யற்றவர்களாயிருக்கின்றார்கள்'' என்றார்.



தில்லை நடராஜர் ஆலயமும், சிவகங்கை தீர்த்தமும்.

"குருநாதா நான் இராச்சியாதி போகங்களை வெறுத்து இத் தில்லை வனத்திலேயே நிம்மதியாக வசிக்கலாமென்று முடிவு செய்துவிட்டேன். இந்த மகரிஷியும் அவரது பத்தினியும் எனக்கு மாதா பிதாக்களாக இருக்கின்றார்கள். அவர்களை விட்டுப் பிரியாமல் இவ்விடத்திலேயே இருக்கும் படி கிருபை செய்யவேண்டும்' என்று அரசன் கேட்டுக் கொண்டான்.

சமீபத்திலிருந்த வியாக்கிரபாதர் அரசனைப்பார்த்து "இரண்யவர்மா! என்னிடத்தில் உனக்கு அன்பிருக்கு மானால் உனது ராச்சியம் சென்று பிதுர்வாக்கிய பரிபாலனமாக ராச்சியத்தை ஒப்புக்கொண்டு பின்பு உன் சைன்யங்களுடன் இங்குவந்து சேர்வாயாக. வரும்போது அந்தர்வேதியில் பிர்மா யாகம் செய்யுமிடம் சென்று அவ் விடத்திலிருக்கும் திருஸகஸ்ர முனீஸ்வரர்களை ரதத்தின் பேரில் ஏற்றிவைத்து மரியாதையுடன் விரவில் அழைத்து வருவாய்" என்று சொல்லவும், இரண்யவர்மன் ஒருவாறு மனம் ஒப்பி நடேசரைத் தியானம் செய்து, ஹேமசபை யடைந்து பகவானை நமஸ்கரித்து நிற்க, "இரண்யவர்ம! வியாக்கிரபாதர் சொல்லியபடி உன் நகரம் சென்று ராச்சிய பாரத்தை ஒப்புக்கொண்டு மீண்டும் இவ்விடம் வரும்போது நமது திருஸகஸ்ர முனிவர்களை அழைத்து வருவாயாக" என்று பகவான் திருவாக்களித்தலும், அதன்படி இரண்ய வர்மன் பதஞ்சலி வியாக்கிரபாதர்களையும் மற்று முள்ள வர்களையும் வணங்கி விடை பெற்றுக்கொண்டான்.

## இரண்யவர்மனால் ஆலயப் பிரதிஷ்டை.

இரண்யவர்மன் தனது ராச்சியத்தையடைந்து மகுடா பிஷேகம் செய்துகொண்டு சிலநாள் தங்கியிருந்து பின் ஓர் தினம் மந்திரியை யழைத்துத் தனது சதுரங்க சேனைகளை யும், பந்து மித்திரர்களையும் யாத்திரைக்குத் தயார் செய்யும் படி ஆக்ஞாபித்தான். அதன்படி சகல சகாக்களுடன் ஓர் சுபதினத்தில் புறப்பட்டு அந்தர்வேதி என்னும் க்ஷேத் திரத்தை யடைந்து அங்கு வசித்துக் கொண்டிருக்கும் திரு

ஸகஸ்ர முனிவர்களை நமஸ்கரித்து, தில்லைவனம் வரும்படி கேட்டுக்கொண்டான். திருஸகஸ்ர முனிவர்கள் அரச னுடைய வேண்டுகோளுக்கிசைய அவர்கள் அனைவரையும் ரதத்திலேற்றிக்கொண்டு அரசன் தன் மந்திரி பிரதானி பரிவாரங்கள் புடைசூழத் தில்லைவனம் வந்து சேர்ந்தான். சகல ஜனங்களுடன் அவ்விடத்திலுள்ள சர்வேஸ்வர னுடைய தாண்டவ தெரிசனங் கண்டு ஆனந்தமடைந்து தான் அழைத்து வந்த மூவாயிரம் திருஸகஸ்ர முனிவர்களை யும் வியாக்கியபாதருக்குக் கணக்கிட்டுக் காட்டி வருகையில் ஒருவர் எண்ணிக்கையில் குறைவதைக் கண்டு முகம்வாடி யிருந்த மன வருத்தமடைய, கருணை நிதியான பகவான் அசரீரியாக "ஓ! அரசனே! மூவாயிரம் முனிவர்களில் ஒருவர் குறைவதைக் கண்டு மனக்கிலேசமடைய வேண்டாம் தில்லை மூவாயிரவருள் நாமும் ஒருவர் என்பதை நீயறி யாய்!" என்று திருவாக்கருளினர். பின்பு அரசன் அனை வரையும் ஹேமசபையைச் சுற்றிலும் வசித்திருக்கும்படி ஏற்பாடு செய்து அன்றுடம் சபையில் சென்று தாண்டவ தெரிசனங்கண்டு மகிழ்ந்திருந்தான். சின்னுட்களில் இரண் யவர்மனுக்குச் சிதம்பரத்தில் சிவாலயப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று ஆசையுண்டாயிற்று. வியாக்கிய பாதர் ஓர் சுபதினத்தில் ஹேம சபையின் அருகாமையில் நிர்மாணிக்கப்பட்ட ஒரு மங்கள விலாசத்தில் இரண்யவர்ம னுக்கு ராச்சியாபிஷேகஞ் செய்வித்தார். இரண்யவர்மன் வீரர்களாகிய தன் சகோதரர்களை யழைத்துக் கௌடதேசம் சென்று அரசு செலுத்தும்படி கட்டளையிட அவர்கள் அப் படியே ஒப்புக்கொண்டு தமது தேசத்தை யடைந்தார்கள்.

இரண்யவர்மன் தன் வம்சத்தில் பிறந்த அரசர்களால் நீதி தவறுமல் சேர்த்துவைக்கப்பட்ட பெருஞ் செல்வத்தை ஈஸ்வரார்ப்பணம் செய்யக் கருதி வியாக்கிரபாதர் திரு ஸகஸ்ர முனீஸ்வரர்கள், பதஞ்சலி முனிவர் இவர்களுடன் கலந்து ஆலோசித்து விஸ்வகர்மாவைத்தருவித்து சிதம்பர ஆலயமும், திருஸகஸ்ர முனீஸ்வர்கட்கு அலங்கார மாளிகை களும் கட்டும்படி எற்பாடுகள் செய்தான். அதன்படி

விஸ்வகர்மா ஆலயப் பிரதிஷ்டை செய்ய ஆரம்பித்து உன்னத கோபுரங்களும் விலாசமான பிரகாரங்களும், அனேக மண்டபங்களும், நிர்மாணித்து, முனிவர்களின் வாசத்திற்காக மாடமாளிகைகளையும், உன்னத உப்பரிகைகளையும் கட்டி முடித்தான்.

இவ்வாறு விஸ்வகர்மாவினுல் மிக அலங்காரமாக அமைக்கப்பட்ட சிதம்பரமானது இதுவரையில் காணப்படாத ஆச்சர்யகரமாயும், வைகுண்ட சுவர்க்கங்களைப் பரிகசிப்பதாயும், நினைக்கவும் சொல்லவும் முடியாத விசித்திரங்களை யுடையதாயும் விளங்கிற்று. பிறகு சக்கரவர்த்தி ஓர் புண்ணிய தினத்தில் வாஸ்த்து சாந்தி செய்வித்து மாளிகைகளில் திருஸகஸ்ர முனிவர்களைக் கிரகப்பிரவேசம் செய்துவைத்தான். ஸ்ரீ நடராஜமூர்த்திக்கு வேதாகமப்படி திருமஞ்சன முதலிய உத்ஸவாதிகளைப் பதஞ்சலி வியாக்கிரபாதர்களால் விதிப்படி நியமித்து திருஸகஸ்ர முனிவர்களைக் கொண்டு பெருமானுக்கு நித்திய கால அபிஷேக ஆராதனைகளும், ருதுக்களில் காலக்கிரமப்படி செய்ய வேண்டிய உற்சவங்களையும் ஏற்படுத்தினுன். ஆனி மாதத்தில் திருமஞ்சன உற்சவமும், மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்தில், ஆருத்ரா தெரிசனக் காட்சியும் இவ்விரு உற்சவங்களிலும் 10 தினம் விசேஷ விழாக்களும், இடையில் மகா அபிஷேகங்களும் எற்படுத்திப் பெரிய ரதங்களையும், உத்ஸவ பூஷணங்களாக நவரத்தின மயமான ஆபரணங்களையும் செய்துவைத்தான்.

### சமுத்திர தீர்த்தாடன மகோற்சவம்.

இவ்வுற்சவ சம்பவங்களைக் கண்டு களித்த வியாக்கிரபாதர் "மன்னனே! இதுவரையில் உற்சவாதிகள் பூர்த்தியாய்விட்டன. இனி யாவருக்கும் முத்தியளிக்கும் தீர்த்தாடன மகோற்சவத்தை நடத்தவேண்டும்" என்று கூற "எமபெருமானே! எந்த விடத்தில் எந்தத் தீர்த்தத்தில் தீர்த்தாடன மகோற்சவம் செய்விக்கவேண்டும்" என்று வினவினுன்.

"இந்தப் புண்டரீக புரத்திற்கு வட கிழ் திசையில் சமுத்திரத்தில் தீர்த்தாடனம் செய்விக்கவேண்டும். அதன் மகத்துவத்தைப்பற்றி பூர்வீக சரித்திரம் ஒன்றிருக்கின்றது. அதாவது, முன் ஒரு காலத்தில் வருணதேவன் ஒரு அசுரனோடு நூறாண்டுகள் வரையில் வெகு கடுமையாக யுத்தம் செய்தான். இவ்வாறு யுத்தம் செய்ததைக் கண்டு பிராமணாகிய தவசிரேஷ்டர் ஒருவர் இவர்களைச் சமாதனம் செய்வதற்காக ஓரிரவு தனிமையாக வருணனிடம் வந்து கொண்டிருக்கையில், அசுரனே இவ்வாறு மாற்று வடிவம் கொண்டு வருவதாக நினைத்து வருணபகவான் திடீரென்று வருண பாசத்தை ஏவவும், அதனால் கட்டுண்டு அந்தணர் உயிர் நீத்தார். உடனே வருணன் பிர்மஹத்தியினால் பீடிக்கப்பட்டு தெய்வ தேஜஸை இழந்தான். அது முதல் சப்த சமுத்திரங்களும் வறண்டு விட்டன. கடல்கள் வற்றியதால் உலகில் மழையின்றி உயிர்கள் தாபமடைந்தன. இதைக் கண்ட இந்திரன் முதலிய தேவர்கள் மிக்க வியாகூலமடைந்து வருணனுடைய பாவத்தை நிவர்த்திக்கவேண்டி சிதம்பரம் வந்து ஸ்ரீமத் நடராஜரிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். "நாம் மாசி மகத்தில் சமுத்திரத்தில் வருணனுடைய பிர்மஹத்தியை தீர்த்துவைக்கின்றோம்" என்று, ஈஸ்வரன் அனுக்கிரகித்தார். இனி தன் பாவம் ஒழிந்தது என்று வருணன் அந்த மகா நட்சத்திரத்தை மிக ஆவலுடன் எதிர்பார்த்திருக்கையில் அன்று தினம் பார்வதி சமேதராய் ரிஷப வாகனரூடராகச் சகல சிவகணங்களுடன் பிராப்தமாகி வருணனைச் சமுத்திரத்தில் ஸ்நானம் செய்வித்தலும் பாவமொழிந்து பரிசுத்தமடைந்தான். ஆதலால் ஓ! அரசனே! அப்புண்ணிய தீர்த்தத்தில் மகத்தில் தீர்த்தாடன மகோற்சவம் நடத்தவேண்டும்" என்று வியாக்கிரபாதர் சொல்லி அப்படியே நடத்திவைத்தார். இவ்வாறு மகோற்சவங்களை நடத்திக்கொண்டு பிரகஸ்பதிக்குச் சமானமான திருஸகஸ்ர முனிவர்களாலும், பதஞ்சலி வியாக்கிரபாதர்களாலும் அர்ச்சிக்கப்பட்ட ஆனந்த நடராஜமூர்த்தியை இரண்யவர்ம மகாராஜன் சந்தோஷ சித்தனாகத் தரிசனஞ் செய்து வாழ்ந்துவந்தான்.

## உமாபதி சிவாசாரியார்.

தில்லைவாழ் அந்தணர்கள் எனப்பட்ட தீட்சதர்கள் குலத்தில் சுமார் 5, 6 நூற்றூண்டுகளுக்கு முன்பு உமாபதி சிவாசாரியார் என்ற பெரியார் ஒருவர் தோன்றினர். இவர் பதினன்கு வயதளவில் பெரும் பாண்டித்தியமடைந்து ஞானேதயம்பெற்று ஸ்ரீ நடேசப் பெருமானுடைய பெருமைகள், சிதம்பர ரகசியம், பதஞ்சலி வியாக்கிரபாதர் வரலாறு ஆலயப்பிரதிஷ்டை, இரண்யவர்மச் சக்ரவர்த்தியின் சரித்திரம் முதலியவைகள் அடங்கிய கோயிற்புராணம் என்ற ஒரு புத்தகத்தை இயற்றினர். அந்தக் காலத்தில் ஸ்ரீ நடராஜருக்குப் பூஜை செய்து வீட்டுக்குப் போகும் தீட்சதர்கள் மேள வாத்தியங்கள் முழங்க சகல விருதுகளுடன் வீதி வலமாக முத்துச் சிவிகையில் ஏறிச் செல்வது வழக்கம். இந்த வழக்கம் சோழ மகாராஜன் ஒருவரால் ஏற்படுத்தப் பட்டது. ஓர் தினம் உமாபதி சிவாசாரியார் தன் முறைப்படி நடராஜருக்குப் பூஜை செய்துவிட்டு மேள வாத்தியம் பகல் தீவட்டியுடன் ஆடம்பரமாக முத்துச் சிவிகையில் நகர்வலம் வருகையில் மறைஞான சம்பந்தர் என்ற பெரியார் ஒருவர் ஓர் வீட்டுத் திண்ணையில் தனது மாணுக்கர்களுக்குப் பாடம் கற்பித்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். அச்சமயம் இந்த ஊர்வல வைபவத்தைக் கண்ட ஒரு மாணுக்கன் "சுவாமி இவ்வளவு ஆடம்பரமாகப் பகலில் தீவட்டி பிடித்துக்கொண்டு இந்த தீட்சதர் வருகிறதைப் பாருங்கள்!" என்றுசொன்னமாத்திரத்தில் மறைஞான சம்பந்தர்"அப்பா இது பகல் குருடு" என்று அலட்சியமாகப் பதிலளித்தார். பல்லக்கிலிருந்த உமாபதி சிவாசாரியார் இதைக் கேட்ட மாத்திரத்தில் பல்லக்கிலிருந்து திடீரெனக் குதித்து மறைஞான சம்பந்தர் முன்னிலையில் பயபக்தியுடன் வந்து அவர் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரிக்க எத்தனிக்கையில், சூத்திர வம்சத்தில் பிறந்தவர் என்று கருதப்படும் மறைஞான சம்பந்தர், ஸ்ரீ நடராஜப் பெருமானுக்குப் பூஜைசெய்யும் தில்லைவாழ் அந்தணர் குலத்திலுதித்த உத்தமர் ஒருவர் தம்மைப்பணிய வருவது அபசாரமல்லவா என்றுநடுநடுங்கித்

தம் இருக்கையை விட்டு எழுந்து ஓட எத்தனித்தார். உமாபதி சிவாசாரியாரும் பின் தொடர்ந்தார். முன்னும் பின்னுமாக இருவரும் ஓடிக் கடைசியாகச் செங்குந்தர் வசிக்கும் வீதியில் வருகையில் களைப் புற்றனர். அவ்விடம் பாவு தோய்ந்துகொண்டிருந்த செங்குந்தர்களைப் பார்த்து மறைஞான சம்பந்தர் "அப்பா! வெயிலின் உக்கிரத்தா லும் ஓடிவந்ததாலும் களைப்பாயிருக்கிறது சிறிதுக் கஞ்சி ஊற்றுங்கள்" என்று கேட்கலானார். செங்குந்தர்களி லொருவர் சிறிது கஞ்சி ஊற்ற, மறைஞான சம்பந்தர் அதை இரு கைகளையும் சேர்த்து வாயில் வைத்துப் பருகுகையில், முழங்கை வழியாக மிஞ்சி ஒழுகிய கஞ்சியை உமாபதி சிவாசாரியார் குருப்பிரசாதமென்று பயபக்தியுடன் தன் கைகளில் ஏற்றுப் புசித்துவிட்டார். இதைக் கண்ட மறைஞான சம்பந்தர் உமாபதி சிவாசாரியாருக்கு ஞானுனுக்கிரகம் செய்து மறைந்தார்.

இதைக் கேள்விப் பட்ட தில்லைவாழ் அந்தணர்கள் வழக்கம்போல் ஆயிரக்கால் மண்டபத்தில் "பொதுவார்" கூட்டங்கூடி "உமாபதி சிவாசாரியார் சூத்திரபானம் செய்தமையால் தீட்டடைந்தார்" என்று தீர்மானித்து அவரை ஜாதிப் பிரஷ்டம் செய்தனர். அதன்பின் அவரால் இயற்றப்பட்ட கோயிற் புராணத்தை ஸ்ரீ நடராஜர் சபையில் அரங்கேற்றக் கூடாதெனத் தடை செய்துவிட்டார்கள். இதை யறிந்துகொண்ட உமாபதி சிவாசாரியார் தில்லைக்குக் கீழ்புறத்திலுள்ள கொற்றவன்குடி யென்னும் நகரத்திலிருந்த ஒரு மடத்தில் பிரவேசித்து அங்கே தமது கோயிற் புராணத்தைப் பிரதிஷ்டை செய்து பூசித்துக்கொண்டும், தமது மாணக்கர்கட்கு இதோபதேசம் செய்துகொண்டும் இன்பமாகக் காலம் கழித்து வரலானார்.

வழக்கப்படி ஸ்ரீநடராஜப் பெருமானுக்கு உற்சவம் வந்தது. அந்த வருஷம் கொடியேற்றுவிழா உமாபதி சிவாசாரியாருடைய பூஜா முறையாகையால் அவருக்குப்பதிலாக வேறொரு தீட்சதர் அம்முறையை ஏற்றுக்கொண்டு கொடி

யேற்ற ஆரம்பிக்கையில் கொடியேறவில்லை. அறுந்தறுந்து கீழே விழுந்துகொண்டிருந்தது. இதைக்கண்ட தீட்சதர்களும் கொடியேற்று விழாவைத் தெரிசிக்கவந்த பக்திமான்களும் திகைத்துப்போனூர்கள். இந்நிலையில் "எமது தொண்டனாகிய உமாபதி சிவாசாரியனை யழைத்து வந்தாலன்றி இக்கொடியேருது" என்று அசரீரிவாக்கு எழும்பிற்று. உடனே அனைவரும் கொற்றவன்குடி சென்று உமாபதி சிவாசாரியாரைக் கண்டு பணிந்து அவரிடம் விஷயத்தை அறிவித்துப் பயபக்தியுடன் அவரைக் கொடியேற்று விழாவுக்கு அழைத்து வந்தனர்.

### செங்குந்தர்கள் கொடியேற்றுதல்.

தமது ஆசான் களைப்புற்றகாலத்தில் கஞ்சியளித்த செங்குந்தர்களை உடனே அழைத்துவரும்படி உமாபதி சிவாசாரியார் கேட்டுக்கொண்டார். செங்குந்தர்கள் சன்னிதானத்தில் வந்து வணங்கி நிற்க, உமாபதி சிவாசாரியார் ரிஷபக்கொடியை அவர்கள் கையில் கொடுத்து வீதிப்பிரதக்ஷணம் வரும்படி செய்தார். வீதிவலம் வந்த பிறகு துஜாரோகணம் செய்யவேண்டிய ஆகம விதிகளனைத்தும் செய்துமுடிந்தன. பின்பு உமாபதி சிவசாரியார் பஞ்சாட்சர மந்திரத்தை ஜெபித்தவுடன் கொடி தானுகவே ஏறிவிட்டது. பக்தர்கள் பரவசமானூர்கள். தில்லைவாழ் அந்தணர்கள் உமாபதியாரிடம் தங்கள் குற்றத்திற்கு மன்னிப்பு கேட்டுக் கொண்டார்கள். கொடியேற்றுவிழா இனிது முடிந்தது.

"சிவஞான மூர்த்தியாகிய திருவள்ளுவர் இல்லற தருமத்தை உலகத்தாருக்கு நடத்திக் காண்பிக்கும் பொருட்டு மணம் செய்துகொண்டு தமது மனைவியுடன் வாழ்திருக்கையில்—பாவமில்லாத தொழில் நெசவுத் தொழிலென மதித்து அதையே தமது ஜீவனோபாயமாக மேற்கொண்டார். ஆகையால் அத்தகைய மேன்மையான தொழிலை நடத்திவரும் செங்குந்தர்களே இன்று முதல் ஸ்ரீ நடராஜப் பெருமானுடைய கொடியேற்று விழாவை நடத்தி வைக்கட்டும்" என்று சிவாசாரியாரால் நியமிக்கப்பட்டபடி நாளது

வரையில் செங்குந்த மரபினர்களே கொடியேற்று விழாவை நடத்தி வருகின்றார்கள். இதற்காக நாட்டிலுள்ள செங்குந்தத் தலைவர்கள் ஸ்ரீ நடராஜப்பெருமான் மீது தரிக்கு இவ்வளவு என்று வரி விதித்து சிதம்பரத்தி லுள்ள செங்குந்தத் தலைவர்களாகிய நாட்டான்மைக்காரர் களுக்கு அனுப்பி வருகின்றார்கள். நாளது வரையில் சிதம் பரத்தில் கொடி யேற்று விழா செங்குந்தர்களின் உற்சவ மாக நடைபெற்று வருகின்றது.

ஸ்ரீ நடராஜர் ஆலயத்திற்குள் எவரும் மேளவாத்தியங் களுடனும் விருதுகளுடனும் பிரவேசிக்க இன்றும் தீட்ச தர்கள் அனுமதிக்க மாட்டார்கள். எத்தகைய செல்வந்தர் கட்கும் அத்தகைய வரவேற்பு கிடையாது. ஆனல் கொடி யேற்று விழாவை நடத்திவைக்கும் செங்குந்தர்கள் மட்டில் சூரசம்மாரத்தன்று நவவீரர் வேடம் தரித்துச் சகல விருது களுடன் தமது இனத்தார் புடை சூழ மேளவாத்திய கோஷத்துடன் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்கு எதிர் முக மாகத் தெற்கு சன்னதி வழியாக ஆலயத்தில் பிரவேசிக்க லாம். இந்த விசேஷ உரிமை செங்குத்தர்களுக்கு மட்டுமே கொடுக்கப்பட்டிருக்கின்றது. இது மாமூல் வழக்கமாக இன்றும் செங்குந்தர்களால் அனுசரிக்கப்பட்டு வருகின்றது.

### பெற்றான் சாம்பான் சரித்திரம்.

சிதம்பரத்தின் எல்லையில் அரசன் ஆளுகைக்குக் காவலனு யிருந்த பெற்றான் சாம்பான் என்ற ஒரு ஆதித் திராவிடனுக்கு ஸ்ரீ நடராஜர் மீது பக்தி எற்பட்டுத் தீண் டாமை என்ற கொடிய பிணியினல் தான் ஆலயத்தில் தாராள மாகச் சென்று வழிபடுதற்கில்லையே என மனங் கசிந்து அன்றாடம் வீதியில் நின்று, ஆலயத்திலிருந்து சாமி தெரிசனம் செய்துவிட்டு வரும் சிவனடியார்களைத் தெரி சித்து வந்தான். இங்ஙனம் தன் பிறவியை நினைத்துவருந்தி சிவபெருமானுக்கு ஏதேனுமொரு பணிவிடை செய்து வந்தால் மறு ஜெனனத்திலாவது இத் தீண்டாமையை ஒழித் துக் கொள்ளலாமெனக் கருதி ஸ்ரீ நடராஜருக்கு ஆதித்

திராவிடனுகிய தன்னால் செய்யக்கூடிய பணியாதெனச் சிந்தித்துக் கடைசியாக ஸ்ரீ நடராஜருடைய நைவேத்தியத்திற்குச் சமையல் செய்வதற்காக அன்ருடம் விறகு கொண்டுவந்து போடுவது எனத் தீர்மானித்து அதன்படி நடத்தி வந்தான். இவ்வாறு நடத்தி வருகையில் ஓர் தினம் பெற்ருன் சாம்பான் விறகு கொண்டு வந்து போட்டுவிட்டு வீதிப் பிரதட்சணம் வருகையில், ஸ்ரீ நடராஜர் அவன் மீது கிருபை கொண்டு அவன் ஜீவனத்திற்காகத் தெற்கு சன்னதிக்கெதிரில் நடுத்தெருவில் இரண்டு பணம் தோன்றும்படி செய்தார். பெற்ருன் அதைக் கண்டு யார் பணமோ எனத் திகைத்து நிற்கையில் "உனக்குத்தான் அந்தப் பணம் வைக்கப்பட்டிருக்கிறது. எடுத்துக்கொள்." என்று அவன் காதில் ஒரு சத்தம் விழுந்தது. சாம்பான் இதைக் கேட்ட மாத்திரத்தில் கடவுள் திருவருளை நினைத்து மெய் சிலிர்த்து பயபக்தியுடன் அந்தப் பணத்தை எடுத்துப் போய் தனக்கும் தன் குடும்பத்திற்கும் வேண்டிய ஆகாரப் பண்டங்களை வாங்கிக்கொண்டு சேரிக்குத் திரும்பினுன். இவ்வாறு ஸ்ரீ நடராஜர் கிருபையால், தினந்தோறும் பெற்ருன் சாம்பானுக்கு இரு பணம் கிடைத்து வந்தது.

மற்ருேர் தினம் பெற்ருன், விறகுக் கட்டு கொண்டு வந்து போட்டுத் திரும்புகையில் ஸ்ரீ நடராஜர் ஓர் அந்தணர் வடிவத்துடன் அவன் முன்தோன்றி, "அப்பா நாளைய முதல் கொற்றவன்குடியி லிருக்கப்பட்ட உமாபதி சிவாசாரிய சுவாமிகள் மடத்திலும் விறகுக்கட்டு கொண்டுபோய் போட்டு வருவாயாக" என்று கூறி மறைந்தார்.

இந்த அதிசயத்தைக் கண்டு சாம்பான் இது ஈஸ்வராக்கினை என மதித்து மறு தினம் முதல் அப்படியே செய்து வந்தான். இப்படி வழக்கமாக நடந்து வருகையில் ஓர்தினம் பெரு மழை பொழிய நாடெங்கும் வெள்ளமாய்ப் போய் விட்டது. வழி துறை தெரியவில்லை. இந்நிலையில் இன்றைய தினம் நமது திருப்பணி நின்றுவிட்டதே என்று பெற்ருன் மனக் கிலேசமுற்று வருந்தி இருக்கையில், விபூதி ருத்திராட்சங்களணிந்துகொண்டு ஓர் அந்தணர் சேரியில் பிரவே

சித்து "அடேய் சாம்பான்! இன்று என் ஸ்ரீ நடராஜருக்கும், கொற்றவன்குடியிலிருக்கும் உமாபதிக்கும் விறகு கொண்டுபோகவில்லை?" என்று அதட்டிக் கேட்டார்.

இதைக் கேட்டு பெற்றான் உடல் நடுங்கி "சுவாமி! காட்டிற்குச் சென்று விறகு வெட்டிவர வழி தெரியவில்லை. ஜலப்பிரவாகத்தால் காடெல்லாம் மூழ்கிக் கிடக்கிறது. நான் என்ன செய்வேன்" என்று வருத்தத்துடன் பதிலுரைத்தான்.

"அடேய்! நீ விறகு தயார் செய்துகொண்டு கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியார் மடத்திற்குப் போகவேண்டுமென்று வெள்ளத்தைப் பார்த்துச் சொன்னால் ஒரு வழி புலப்படும். அந்த வழியே சென்று விறகுக் கட்டை மடத்தில் கொண்டுபோய் போட்டுவிட்டு இந்தச் சீட்டையும் அவ்விடத்தில் கொடுப்பாயாக" என்று கூறி மறைந்தார்.

இவ்வாறு தன் முன் தோன்றி உத்திரவிட்டு மறைந்தவர் சர்வேஸ்வரன் என்று பெற்றான் மனத்தெளிவடைந்து மகிழ்ச்சி கொண்டு உடனே தன்சிறு குடிசையைப் பிரித்து அதிலுள்ள மரம் கழிகளைப் பிளந்து இரு சுமைகளாகக் கட்டித் தான் ஒன்றும் தன் மனைவி யொன்றுமாகத் தூக்கிக்கொண்டு போகும்போது சுவாமிகள் உத்திரவின்படி "கங்காதேவியே! நாங்கள் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார் மடத்திற்குப் போகின்றோம் வழி விடுக" என்று கேட்டுக்கொண்ட அளவில்—ஆச்சர்யப் படத்தக்கவிதமாக வழி பிளந்தது. பெற்றான் அந்த வழியே சென்று மடத்தை யடைந்து விறகுக்கட்டை இறக்கிவிட்டு அந்தணர் கொடுத்த சீட்டை உமாபதியாரிடம் அனுப்பினான். உமாபதியார் அச்சிட்டை வாங்கிப் பார்த்தார்.

"அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகை சீட்டுப் படியின்மிசைப்
பெற்றான் சாம்பானுக்குப் பேத மறத் தீக்கை செய்து
முத்திக் கொடுக்க முறை"

—எழுதியது உள்பட அம்பலவாணர். என்று அச்சீட்டில் எழுதப்பட்டிருந்தது.

இதைக்கண்ட உமாபதி சிவாசாரியார் மிகுந்த ஆச்சர்யமடைந்து பேரானந்தமுற்று இந்த நீசனிடமும் ஸ்ரீமத் நடராஜர் திருவுளங்கொண்டு நேரே பிரஸன்னமாகி இத்திருமுகத்தை யனுப்பியிருக்கிறாரே என்று நினைத்து மெய்மறந்து அத்திருமுகத்தை இரு கண்களிலும் ஒற்றிக்கொண்டு பெற்றான் சாம்பானைக் கூப்பிட்டு "நீ இந்த வெள்ளக் குளத்தில் போய் ஸ்நானம் செய்து வருவாயாக" எனக் கட்டளை யிட்டார். அந்தப்படி பெற்றான் சாம்பான் ஸ்நானம் செய்து விபூதியணிந்து உமாபதியார் சன்னிதானத்தில் பயபக்தியுடன் நின்றான். உடனே உமாபதியார் சிவாகம விதிப்படி மந்திராதி தீட்சை முதலியவைகளைச் செய்து ஞானதிருஷ்டியால் பார்த்த மாத்திரத்தில் ஜோதி எழும்ப அதில் பெற்றான் சாம்பான் ஐக்கியமாகி மறைந்துவிட்டான்.

இதைக்கண்ட அவன் மனைவி "அந்தோ! இந்த மடத்துசாமியார் என் புருஷனை எரித்து விட்டாரே! நான் இதற்கு என்ன செய்வேன்" என்று ஓலமிட்டழுது கொண்டு இந்த அநீதத்தை அரசனிடம் சென்று முறையிட்டாள்.

இந்த ஆச்சரியகரமான சமாசாரத்தைக்கேட்டு அரசன் திகைத்து மந்திரி முதலானவர்களோடு ஆலோசித்து "இது ஒரு மகத்துவம் பொருந்திய செய்கையாக இருக்கவேண்டுமெனக்கருதி மந்திரி பிரதானிகள் உடல் காப்பாளர் புடைசூழ உமாபதி சிவசாரியார் மடத்திற்கு வந்து சேர்ந்தான். இவ்வாறு தன்னை விசாரிப்பதற்காக அரசன் வருவதை ஞானதிருஷ்டியால் அறிந்துகொண்ட உமாபதியார் அரசனுக்கு ஒரு திருஷ்டாந்திரம் காட்டவேண்டுமென்று தம்முள் தீர்மானித்துக் கொண்டார். அரசன் உமாபதி சிவாசாரியாரை வணங்கித் துதித்து நின்றான்.

## முள்ளிச் சேடி முனிவரான விந்தை.

சுவாமிகள் வாசலில் இருந்த ஒரு முள்ளிச்செடியைப் பார்த்து அதற்கு விதிப்படி மந்திர தீட்சை செய்து ஞானக் கண்ணால் உற்று நோக்கிய மாத்திரத்தில் திடீரென ஒரு ஜோதி எழும்ப அதிலிருந்து ஒரு முனீஸ்வரர் தோன்றி உமாபதியாரை வணங்கினர். அப்படித் தன்னை வணங்கியவரை ஆசிர்வதித்து உமாபதியார் அவர் வரலாற்றை வினவினர்.

"சுவாமிகளே! அடியேன் முன் ஜென்மத்தில் மானிட வடிவத்தோடு இருந்தவன்; நான் ஒரு தவசி; ஈஸ்வரனைக் குறித்து நான் ஒரு கோரிக்கையின் நிமித்தம் கடுந்தவம் இயற்றி வருகையில் ஈஸ்வரன் என்மீது கருணைகொண்டு பிராப்தமாகி உனக்கு என்ன வரம் வேண்டுமெனக் கேட்டருள, நான் மனதில் ஒன்று கருதி அதை மறைத்து மற்றோர் வரத்தைக் கேட்டேன். உடனே ஈஸ்வரன் என்மீது கோபமடைந்து இவ்வாறு மனதிலொன்றும் வாக்கிலொன்றுமாக நீ வரம் கேட்டமையால் முள்ளிச்செடியாகப் போகக் கடவதென்று சபித்தார். என் அறியாமையைப்பற்றி நான் பெரிதும் வருந்தி மறுபடியும் ஈஸ்வரனைப் பணிந்து சாப நிவர்த்தி எப்போது என்று கேட்டுக்கொண்டேன். "மகான்களின் சன்னிதானத்தில் நீ முள்ளிச் செடியாகப் பிறந்து அவர்களுடைய திட்சண்யத்தால் சாப நிவர்த்தியடைவாய்" என்று அருளியபடி தங்கள் கடாட்ச வீட்சண்யத்தால் நான் புனிதனானேன்" என்று கூறினர். இதைக் கேட்ட உமாபதியார் அருள் நோக்கால் அம் முனீஸ்வரரைப் பார்த்த மாத்திரத்தில் அப்படியே திடீரென மறைந்துவிட்டார். இதைக்கண்டு அரசன் முதலாயினோர் பிரமித்து உமாபதியாரிடம் விடைபெற்றுக் கொண்டார்கள். அரசன் பெற்றான் சாம்பானுடைய மனைவியின் ஜீவனத்திற்காக விறகடி விளாகம் என்னும் கிராமத்தைச் சர்வமான்யமாகக் கொடுத்தான்.

அரசனுக்கு உமாபதி சிவாச்சாரியாரிடம் அளவு கடந்த பக்தி ஏற்பட்டு சுவாமிகளுடைய ஆதீனத்

திற்கு ஏராளமான நிலங்களை மானியம் செய்தான். பழமையாயிருந்த மடாலயத்தையும் மிகவும் விசித்திரமாகப் புதுப்பித்தான். அப்பால் உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அநேக சிஷ்யர்களுக்குச் சாஸ்திரங்கள் போதித்துத் தீட்சை செய்துவித்து அவர்களது ஞானக் கண்ணைத் திறந்துவிட்டார். கடைசியாக அவர் நால்வர்களுக்கு மோக்ஷானந்தம் கொடுத்தருளிய பின்பு தனது சிஷ்யர்களில் முதன்மையானவராகிய அருள்நமச்சிவாயரென்பவருக்கு ஞான சாஸ்திரங்களை உபதேசித்துத் தம்மால் இயற்றப்பட்ட 'நெஞ்சுவிடு தூது' என்னும் ஞான நூலைப் போதித்து அவரைத் தனக்குப் பிற்காலத்தில் மடத்தின் தலைவராக இருக்கும்படி ஆக்ஞாபித்துப் பின் நித்தியானுபூதியடைந்தார். உமாபதி சிவாச்சாரியார் வட மொழியில் பௌஷ்கராகமத்துக்கு வியாக்கியானமும், தமிழில் சிவப்பிரகாசம், திருவருட்பயன் வினாவெண்பா, கொடிக்கவி, உண்மைநெறிவிளக்கம், சங்கற்ப நிவாரணம், போற்றிப்பஃறொடை, நெஞ்சுவிடு தூது, திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்ட புராணம், சேக்கிழார் புராணம், திருப்பதிக் கோவை, முதலிய பல அரிய நூல்களை இயற்றி இருக்கிறார்.

சிதம்பர மகாத்மியத்தைப்பற்றியும், சிதம்பர ரகசியத்தைப்பற்றியும், சிதம்பரத்தின் ஆலயப் பிரதிஷ்டையைப் பற்றியும், பதஞ்சலி, வியாக்கிரபாதர், உமாபதி சிவாசாரியார், இரண்யவர்மச் சக்ரவர்த்தி, முதலியவர்களின் வரலாறுகளைப்பற்றியும், சிவானந்த யோகீஸ்வரர் மிகவும் விரிவாகக் கூறியதை டாஷ் முதலியார் மிகுந்த பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்தார்.

"இதன் பின்னாவது சிதம்பர ரகசியத்தைப்பற்றி நீ குறை கூறாமலிருப்பாயா? நான் இதுவரையில் சொல்லி வந்த கதைகளெல்லாம் பூர்வாங்கமாகப் பல பெரியோர்களால் எழுதப்பட்ட சிதம்பர மகாத்மியங்களில் விரிவாகக் காணப்படுகின்றன" என்று யோகீஸ்வரர் வினவியதற்கு டாஷ் முதலியார் தக்க பதிலளிக்கலானார்.

"யோகீஸ்வரரே! தாண்டவ தெரிசனத்தைப் பற்றி நான் எற்கனவே என் அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிறேன். தாருகாவனத்து ரிஷிபத்தினிமார்களுடன் கிரீடை செய்துகொண்டு ஈஸ்வரன் நிர்வாணமாக ஆடிய ஆட்டமே தாண்டவத்தின் நேர்மைக்கு எற்பட்ட ஆதி முகாந்திரமெனில் அதற்குள்ள பெருமையை நீங்களே ஆராய்ந்தறிந்துகொள்ளலாம். அதன் பின்னுல் விபாக்கிரபாதர் வரலாற்றைப்பற்றி நுட்பமாக ஆராய்ந்தால், அறிவுள்ளவர்கள் நகைக்காமலிருக்க முடியாது." அரிது! அரிது! மானிடராகப் பிறத்தலரிது! என்று நமது புராணங்களும் சாஸ்திரங்களும் முறையிடுகின்றன. ஒருவன் மனிதப் பிறவியடைதற்கு எவ்வளவோ புண்ணியங்கள் செய்யவேண்டும். அப்படிப் பல புண்ணியங்களைச்செய்து கிடைத்தற்கரிய மானிடப் பிறவி யடைந்தபின் மறுபடியும் அப்பிறவியை மிருகப் பிறவியாக ஒருவன் மாற்றிக்கொள்ள விரும்புவானு? மாத்தியானந்தர் என்னும் மகரிஷி வெகுவாகச் சிரமப்பட்டுத் தன் உருவத்தை மனித உருவத்திலிருந்து புலி உருவமாக மாற்றிக்கொள்வதற்காக தவம் செய்திருக்கிருர். ஈஸ்வரனே நேரில் பிரத்தியட்சமாகக்கூடிய அத்தகைய கடுந்தவமியற்றி சர்வேஸ்வரனை நேரில் கண்ட ஒருவன் எதையும் விரும்பலாம். நேரில் பிரத்தியட்சமான ஈஸ்வரன் தனது பக்தன் கேட்ட வரத்தை தாராளமாகக் கொடுப்பதற்குத் தயாராகவே வருகின்ருர் என்பது "அன்பனே! உனக்கு என்ன வரம் வேண்டும்" என்று அவர் கேட்கின்ற கேள்வியிலிருந்தே அறியக்கிடக்கின்றது. அப்படி சர்வேஸ்வரன் தோன்றுவதையும், வரம் கொடுப்பதையும் உண்மை யென்றே வைத்துக்கொள்வோம். இந்த சர்வேஸ்வரன் சாமான்யமாகத் தோன்றிவிடுகின்ருரா? உயிரையும் உடலையும் நெருப்பில் வாட்டி பேச்சு மூச்சில்லாமல் கடுந்தவம் புரியவேண்டும். ராவணன் ஈஸ்வரனை நேரில் வரவழைப்பதற்காகத் தன் தலைகளை ஒவ்வொன்ருக அறுத்தெறிந்தானும்! கண்ணப்ப நாயனர் கண்ணைப் பிடுங்கிக்கொண்டார். இவ்வாறு பக்தர்கள் தங்கள் உடலைப் பொருள்

படுத்தாது வாட்டித் தவம் புரிந்து ஈஸ்வரனை நேரில் காண்பது எதற்காக ?

ஒவ்வொரு சமயம் இக் கடவுள்களுக்கு கிருக்குண்டாவது முண்டு. அநுசூயை என்னும் பதிவிரதையின் அழகைக் கண்டு அவளைக் காதலித்த மும்மூர்த்திகளையும் ஒரே குழந்தையாக்கித் தொட்டிலிலிட்டு ஆட்டிக்கொண்டிருக்கையில் மும்மூர்த்திகளின் பத்தினிமார்களாகிய அம்மன்கள் அப்பதிவிரதையின் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து மாங்கல்யப் பிச்சை கேட்டதற்காக மனமிரங்கி அநுசூயை அவர்களைப் பழைய ரூபமாகும்படி அனுக்கிரகித்தாள் என்று ஒரு கதையுண்டு. இவ்வாறு பெண் சோரம் செய்யப்போன அயோக்கியர்கள் இவ்வுலகனைத்தும் காத்து ரட்சிக்கவும், ஆக்கவும், அழிக்கவும் கூடிய கடவுள்களாக இருக்க முடியுமா, என்பதை அறிவுடையோர் யோசித்துப் பார்க்கவும். காமவெறி கொண்டு அதனால் மனிதத் தன்மையை இழந்து கேவலம் மிருகங்களிலும் கேடாக நடந்துகொண்டிருக்கும் கடவுள்களை எங்ஙனம் உயர்வாக மதிக்க முடியும்? சிறுதொண்ட பக்தனுடைய பிள்ளையைச் சமைத்துப்போடும்படி கடவுள் கேட்க அதன்படி தன்பிள்ளையைக் கொன்று அதன் கறியைச் சமைத்துப் பரிமாறியிருக்கிறான். இம்மாதிரி எத்தனையோ விதமான துர் நடத்தைகள் கடவுளின் பெயரால் புராணங்களில் காணப்படுகின்றன.

சிதம்பரம் ஆலயத்தில் ஸ்ரீ தட்சிணா மூர்த்தி சுவாமி சன்னிதானத்திற்குப் பக்கத்தில் ஒரு விநோதமான விநாயகர் விக்கிரகம் இருக்கிறது. இந்த நாகரீக உலகத்தில் அத்தகைய உருவம் ஒன்றை யாராவது அயல் நாட்டார் பார்த்துவிட்டால் இம்மாதிரி ஆபாசமான ஒரு கடவுளை வணங்கக்கூடிய இந்து சமூகத்தனதையே ஏன் கேவலமாக மதிக்கமாட்டார்கள் ? அந்த விநாயகருக்கு வல்லபகணபதி என்று பெயர். தன் துடையின் மீது ஒரு பெண்ணை உட்காரவைத்துக்கொண்டு அந்தப் பெண்ணின் மர்மஸ்தானத்தில் விநாயகர் தமது தும்பிக்கையைப் புகுத்திக் கொண்டிருக்கின்றார். இந்த மாதிரியான ஒரு கோலாகலத்தில் விநாயகர் வீற்றி

ருப்பதற்கு ஒரு விந்தையான புராணக்கதையு முண்டு. அதாவது சூரபத்மனுக்கும் சுப்பிரமணிய சுவாமிக்கும் கடும்போர் நிகழ்ந்த காலத்தில் இப்பெண்ணிடமிருந்து கோடிக்கணக்கான அரக்கர்கள் பிறந்து கொண்டே இருந்தமையால், சுப்பிரமணியரால் கொல்லப்பட்ட, அரக்க சைன்னியம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே, அரக்கர்களின் அழிவு ஒரு பங்கென்றால் பிறவி இருமடங்காயிருந்தது. இதைக் கண்ட முத்தண்ணாவாகிய விநாயகர் அந்த மாயா சத்தியைப் பிடித்துக்கொண்டு வந்து தன் துடைமீது வைத்துக்கொண்டு அவளது யோனித்துவாரத்தைத் தமது துதிக்கையினால் அடைத்து அதன் மூலமாக அரக்கர்களின் பிறப்பை நிறுத்திவிட்டாராம்.

இது இருபதாம் நூற்றாண்டு பேசும் படக் காட்சிகளை இன்று சென்னையில் நேரில் பார்க்கின்றீர்கள். நீங்கள் வசிப்பது பழைய புராண உலகமல்ல. ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தில் முடவனாகிய அருணன் சாரத்தியம் செய்ய சூரியன் பூமிப் பிரதட்சணம் பண்ணி வருகிற காலமெல்லாம் மறைந்துபோய் விட்டது. அந்த அத்தைப் பாட்டி கதைகளையெல்லாம் இப்பொழுது யாராவது நம்புவார்களா? ஒருக்காலும் நம்பவே மாட்டார்கள். ஒரு பெண்ணிடமிருந்து காப்பிக்கொட்டை யரைக்கும் யந்திரத்திலிருந்து அதிவேகமாகக் காப்பிப் பொடி உதிர்வது போல், அரக்கர்கள் எண்ணிக்கை யில்லாமல் கோடிக் கணக்காக ஜெனித்துக் கொண்டிருந்தார்கள் என்று கூறுகின்ற ஒரு கதையைக் கேட்டால் எப்படி நகைக்காமலிருக்க முடியும்? சுக்கில சுரோணித சம்மந்தத்தால் கருவாகி உருவாகி வளர்ந்து குழந்தை யுருவமாக வயிற்றிலிருந்து வெளிப்படும் வரையில் எத்தனையோ தத்துவங்களை ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்திருக்கின்றார்கள். ஒரு வினாடியில் பல்லாயிரக் கணக்கான குழந்தைகளை உற்பத்தி செய்துகொண்டிருந்த அப்பெண்ணிற்கு எங்கிருந்து புத்திரோற்பத்திக்கு ஆதாரமான சுக்கில சம்மந்தம் ஏற்பட்டது? இவ்வளவு புத்திரோற்பத்திற்கு



வல்லப கணபதி.

இத்தகைய கோலாகல வைபவத்தில் லீலாவினோதரான வினாயகர் விக்கிரகம் ஒன்று தில்லை நடராஜர் ஆலயத்தில் தட்சணாமூர்த்தி சன்னிதிக்கருகாமையி லிருக்கின்றது.

காரணமாயிருந்த அவளது கணவனே அல்லது கணவன் மார்களோ யார் என்பது மர்மமாகவே யிருக்கின்றது.

இந்தக் கதை ஒருபுற மிருக்கட்டும். விநயகர் தமது துதிக்கையினல் யோனித் துவாரத்தை அடைத்தவுடன் மேற்கொண்டு அவளுக்குக் குழந்தை பிறக்கவேயில்லையாம். சூரபத்மனுடைய சைன்னிய வளர்ச்சிக்கு அம் மங்கை காரணமாகச் சிருஷ்டிக்கப்பட்டவள் என்று கருதினல் அத் தகைய வரப்பிரசாதம் விநயகருடைய துதிக்கை அடைப் பினல் நின்று விடுமா? அவள் வயிற்றிலிருந்த மிகுதிக் குழைந்தைகள் வேறு எங்கேயாவது துவாரம்செய்து கொண்டு புறப்பட்டுவிடாதா? பிர்மாவின் முகத்திலிருந் தும், புஜத்திலிருந்தும் பிறவிகள் ஏற்பட்டிருக்கிற காலத் தில் ஒரு பெண்ணின் நவத்துவாரங்களில் ஒன்று அடை பட்டால் மற்றவைகளிலிருந்து ஏன் குழைந்தைகள் வெளிப் படலாகாது?

இந்த அசம்பாவிதமான உருவமுள்ள ஒரு விநாயகரை இன்றளவும் சிதம்பரத்தில் வணங்கி வருகிறர்கள். ஆலயம் என்பது மனதைப் பரிசுத்தமாக்கக்கூடிய ஓர் ஏகாந்த ஸ்தானமா யிருக்க வேண்டுமென்பதும், அதில் சென்று தியானம் செய்வதால் மனத்தூய்மை அடையவேண்டுமென் பதும் நாகரீகமடைந்த தேசத்தார்களின் கொள்கை. சிதம் பரத்திலுள்ள வல்லப கணபதியைப்போல் ஒரு விக்கிர கத்தை யாராவது ஸ்திரி புருஷர்கள் பார்த்தால் அவர் கள் மனம் தூய்மை யடைவதைவிட்டு காமவிகாரத்தை யடையும என்பதை எவராலும் ஆட்சேபிக்கமுடியாது. "ஆலயந் தொழுவது சாலவு நன்று" என்ற பழமொழி எப்படிப் பொருந்தும்?

## மனிதன் மிருகமாவானு?

வியாக்கிரபாதருடைய வியாக்கியானத்தைப்பற்றி நான்விவரிக்கப் புக என்கதை எங்கெங்கோ சென்றுவிட் டது. மறுபடியும் அந்தக் கேள்வியை எடுத்துக்கொள் வோம். மாத்தியானந்த மகரிஷி கடுந்தவம் புரிந்து ஈஸ் வரனை வரவழைத்து த்ன் உருவத்தை மிருக உருவமாக

மாற்றிக்கொண்டார். ஈஸ்வரன் நேரில் வந்தகாலத்தில் மாத்தியானந்தர் விரும்பி யிருந்தால் மோக்ஷத்தையோ; தாண்டவ தரிசனத்தையோ, அன்று அளவற்ற செல்வத்தையோ, இந்திராதி தேவலோகபோக பாக்கியங்களையோ, எதை விரும்பியபோதிலும் கேட்டிருக்கலாம். உடனே அடைந்து மிருக்கலாம். எதைக்கேட்டபோதிலும் ஈஸ்வரன் கொடுக்கக் கூடியவர் என்பதில் ஏதாவது சந்தேக முண்டோ? அப்பேர்ப்பட்ட ஒரு நல்ல சந்தர்ப்பத்தில் மாத்தியானந்தர் தமது மனித உருவத்தை விட்டு மிருக உருவத்தையடைய வரங் கேட்க வேண்டிய காரணமென்ன? இராக்காலத்தில் புஷ்பம் எடுக்க மரங்களில் ஏறுங்காலத்தில் வழுக்காமலிருக்கப் புலியின் கால்களை அடையவேண்டுமா? 'வழுக்காமலிருக்க அனுக்கிரகிக்கவேண்டும்' என்று ஒரு வரம் கேட்டிருந்தால் 'அப்படியே ஆகக்கடவது' என்று ஈஸ்வரன் ஒரு வரம் கொடுத்திருக்கமாட்டாரா? தனது பக்தரைப் பாதி புலியுருவமாக்கியதில் ஸ்ரீமத் நடராஜப்பெருமான் அடைந்த லாபம் தான் என்னே? மாத்தியானந்தருடைய பயித்தியகாரக் கோரிக்கையை மாற்றி மனித உருவத்துடன் மரங்களில் வழுக்காமல் ஏறக்கூடிய பிரத்தியேகமான சக்தியையாவது ஸ்ரீ நடராஜர் ஏன் அளித்திருக்கக் கூடாது.

புலி உருவமடைந்து அதன் காரணமாக வியாக்கிரபாதர் எனப்பெயர் பெற்ற மாத்தியானந்தருக்கு உபமன்யு என்ற ஒரு குழந்தை பிறந்தது. வியாக்கிரபாதரின் மனைவி வசிஷ்டரின் சகோதரியாகையால் உபமன்யு என்ற அக் குழந்தை வசிஷ்டரின் ஆச்சிரமத்தில் பிறந்தபடியால் காமதேனுவின் பாலை அருந்தி வளர்ந்தது. பின்னர் வியாக்கிரபாதர் தனது மனைவியையும் குழந்தையையும் தன் வீட்டிற்கு அழைத்து வந்தார். உபமன்யு காமதேனுவின் பாலை நினைத்துக்கொண்டு வேறு எவ்வித ஆகாரமும் புசியாமல் வருந்துவதைக் கண்டு வியாக்கிரபாதர் அக்குழந்தையைக் கொண்டுபோய் ஸ்ரீ நடராஜப் பெருமான் சன்னிதியில் விட்டுவிட்டு நிஷ்டையிலிருந்தார். பசியால் மெலிந்து அழுது கொண்டிருந்த குழந்தையின் மீது பகவான் இரக்கங்கொண்டு

அக்குழந்தையின் நிமித்தம் திருப்பாற் கடலேயே அவ்விடம் வரவழைக்க; அன்றுடம் அந்தத் திருப்பாற் கடலின் பாலேக் குடித்து அக்குழந்தை வளர்ந்து வரலாயிற்று.

இந்தக் கதையைக் கூர்ந்து கவனியுங்கள். ரசாயன சாஸ்திரமும் விஞ்ஞான விற்பனமும் வளர் பிறைபோல் வளர்ந்து வருகின்ற இந்த நவீன காலத்தில் பாலேத் திரவ ரூபமாகவே பலநாள் வரையில் பத்திரப்படுத்தி வைக்க வழி கண்டுபிடிக்க முடியாமல் இன்று வரையில் மேல் நாட்டுப் பால் வியாபாரிகள் பாலேப் பொடியாகவும், கட்டியாகவும் தயார் செய்து விற்பனே செய்து வருகிறுர்கள். ரஸாயன முறையில் கட்டுப்படுத்தப்பட்டாலன்றி பால் 24-மணி நேரத்தில் புளித்துப் போகக்கூடிய தன்மையை யுடையது என்பதை சமான்ய ஜனங்களும் அறிவர். பாலின் இயற்கை இத்தகையதாயிருக்க ஒரு கடலே பால்மாயமாக வெகுநாள் வரையில் கெட்டுப்போகாமல் எப்படியிருக்க முடியும்? இந்தப் பால் கடல் மட்டுமா இருக்கிறது! தயிர் கடல் ஒன்றிருக்கிறதாம்! கருப்பஞ்சாற்றுக் கடல் ஒன் றிருக்கிறதாம்! கடவுள் தயிர்க்கடலே உண்டாக்க எவ்வளவு பெரிய பாத்திரம் சம்பாதித்து அதில் பாலேக் கொதிக்க வைத்துப் புறையிட்டுத் தயிராக்கியிருக்க வேண்டும் என் பதும், எந்த இடத்தில் ஆலேவைத்து ஆட்டிக் கடல் அளவு கருப்பஞ்சாற்றை உற்பத்தி செய்தார் என்பதும், மிகவும் ருசிகரமான கேள்விகளல்லவா? பால் கடலும், கருப்பஞ் சாற்றுக் கடலும் இருக்கிறதென்றுல் இதைவிட அபாண்ட மான ஒரு பித்தலாட்டத்தை எந்தப் புராண கர்த்தாவும் கற்பிக்க முடியாது. ஆதலால் பாற்கடலின் கதையையும், அதை கொண்டு ஸ்ரீ நடராஜர் உபமன்யுவை வளர்த்த கதையையும் எவ்வளவு தூரம் பொருள் படுத்தலாமென் பதை அவரவர் அறிவைப் பொருத்த காரியமாக நாம் விட்டு விட வேண்டியதுதான்.

### சரித்திர ஆராய்ச்சி.

இதன் பின் சிதம்பர ஆலயப்பிரதிஷ்டையைப் பற்றிச் சிறிது கவனிப்போம். இரண்யவர்மச் சக்கரவர்த்தி தேவ

தச்சனாகிய மயன் என்பவனைக்கொண்டு ஸ்ரீ நடராஜர் ஆலயத்தை நிர்மாணித்தானென்பது புராணக்கதை. ஆயிரக்கால் மண்டபத்தைப் பூதம் ஒன்று ஒரே இரவில் கட்டியதாகவும் விடியுமுன் அந்த பூதத்தால் தொளாயிரத்தித் தொண்ணூற்றொன்பது கால்கள்தான் நிருத்த முடிந்ததென்றும், அதற்குள் விடிந்து விட்டதினால் அப்படியே போட்டுவிட்டுப்போய்விட்டதால் ஆயிரக்கால் மண்டபத்திற்குள் தொளாயிரத்தித் தொண்ணூற்றொன்பது கால்கள் தானிருக்கின்றனவென்பதும் நாளைக்கும் வழங்கிவருகின்ற ஓர் உபக்கதை. ஆனால் ஒருவராவது இன்று வரையில் ஆயிரக்கால் மண்டபத்திற்கு எத்தனை கால்கள்தானிருக்கின்றன என்று சிரமப்பட்டு எண்ணிப் பார்த்திருக்க மாட்டார்களென்பது நிச்சயம்.

சிதம்பர ஆலயத்தில் பல கல்வெட்டுகளும் சிலா ஸாஸனங்களும் காணப்படுகின்றன. அவற்றை அரசாங்கத்தார் ஆராய்ச்சி செய்து பார்த்தவரையில் பல தமிழரசர்கள் காலங்களில் படிப்படியாக சிதம்பர ஆலயம் கட்டப்பட்டதாக அறிகின்றோம். பூதமாவது, தேவதச்சனாகிய மயனாவது, இரண்யவர்ம சக்கரவர்த்தி என்பவராவது கட்டியதாக சரித்திரசம்பந்தமான அத்தாட்சி எதுவுமில்லை என்று திட்டமாகக் கூறலாம்.

கி. பி. 907 முதல் 948ஆம் வருஷம் வரையில் அரசாண்ட **பராந்தகசோழன்** என்பவன் தில்லையம்பலத்தில் பொன் ஓடுகள் வேய்ந்து அதனை உண்மையில் பொன்னம்பலமாக்கியதாகச் சரித்திரமிருக்கின்றது. இவனது சிவதருமத் திருப்பணிகளைப் பல கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. முதலாங் **குலோத்துங்க சோழன்** அரசாட்சி காலமாகிய கி. பி. 1012 வருஷங்களுக்கப்பால் அவனது படைத்தலைவர்களில் ஒருவனான **மணவிற்கூத்தனான காலிங்கராயன்** எனபவனது மேற்பார்வையில் சிதம்பர ஆலயத்தில் நூற்றுக்கால் மண்டபமும், பெரிய சுற்று மதில்களும், சிவகாமியம்மைக் கோட்டமும், தேவாரம் ஓதுதற்குரிய மண்டபமும், கட்டுவித்திருக்கின்றான். நால்வர் அருளிச் செய்த தேவாரப் பதிகங்களைச் செப்பேடுகளில் எழுதுவித்துத் தில்லையம்

யதியில் சேமித்து வைத்தவனும் இவனேயாகும். இவன் இவ்வாறு இயற்றிய அரும்பெரும் தொண்டுகளைப் பாராட்டி விளக்கக்கூடிய பல வெண்பாக்கள் தில்லையம்பதியிலும், திருவதிகை வீரட்டானத்திலும் உள்ள கோயில்களில் வரையப்பட்டுள்ளன.

சரித்திரம் இவ்வாறு கூறுகையில் பூதம் கட்டியதாக வும், தேவதச்சனாகிய மயன் கட்டியதாகவும் பலவாறு சிதம் பர புராணம் கூறுவது எப்படிப் பொருந்தும். வரவு செலவுத்திட்டம் தெரியாமல் அரசாட்சி செய்து முடிவில் பூச்சியமாகி அழிந்துபோன தமிழரசர்கள் பலரால் சிதம் பர ஆலயம் கட்டப்பட்டிருக்கின்றது. பல அரசர்கள், குடிமக்களை இம்சித்து வேலை வாங்கியதுடன் அநீதியாக அவர்களின் செல்வத்தைக் கொள்ளையிட்டு ஸ்ரீ நடராஜ ருக்கு அர்ப்பணம் செய்ததினாலன்றோ இன்று ஸ்ரீ நடரா ஜர் ஆலயம் தங்க மயமாகவும், வெள்ளி மயமாகவும், கனக சபை என்றும், பொன்னம்பல மென்றும், வெள்ளியம்பல மென்றும் பெயர் பெற்று விளங்குகின்றது.

### ஸ்தலங்களும் தீர்த்தங்களும் ஏற்பட்ட வரலாறு :

ஸ்ரீமத் நடராஜப் பெருமான் இரண்யவர்மச் சக்ரவர்த் தியைத் தனக்கு ஆலயம் கட்டும்படியும், தனது சகோதரர்க ளாகிய திருஸகஸ்ர முனிவர்களைக் கொண்டு தனக்குக் கும்பாபிஷேகம் செய்வித்துப் பூஜை செய்யும்படிக்கும், திரு விழாக்கள் செய்யும்படிக்கும், அசரீரி மூலமாகக் கேட்டுக் கொள்வாரா ? சர்வலோக நாயகனாகிய ஸ்ரீமத் நடராஜர் தனக்கு ஆலயம் வேண்டுமென்று நினைத்திருந்தால் இரண்யவர்ம சக்ரவர்த்தியின் தயவை எதற்காக நாடவேண் டும்? சர்வ அண்டங்களையும், ஆக்கவும் அழிக்கவும் வல்ல வராகிய எம்பெருமான் மனதினால் நினைத்த மாத்திரத்தில் கோடி சூரியப் பிரகாசமான ஆலயம் உண்டாகக் கூடுமே? அப்படியிருக்கக் கேவலம் தனக்குக் கோயில் கட்டும்படியும் திருவிழாக்கள் செய்யும்படியும், ஒரு அரசனை அவர் கேட் டுக்கொள்வதென்றால் அந்தக் கதையை தர்க்கரீதியாக

ஆராய்ந்து பாருங்கள்! அறிவுக்கும் இந்தக் கதைக்கும் சிறிதளவேனும் சம்மந்தமுண்டா?

பேயும், பூதமும் ஒரே இரவில் கோயில்கள் கட்டியதாகவும், குஷ்டம் முதலிய ரோகங்களால் பீடிக்கப்பட்டு வருந்திய அரசர்கள் அநாதைகளாகத் திரிகின்ற காலத்தில் தற்செயலாகவோ, சில ரிஷீஸ்வரர்களின் கிருபையாலோ சில தீர்த்தங்களில் மூழ்கி அதனால் நோய் ஒழிய-அதன் பயனாக அந்த ஸ்தல மகிமையை யுணர்ந்து அவ்விடத்தில் ஒரு ஆலயத்தைக் கட்டினார்கள் என்பதும் பொதுவாக சூதபுராணிகரால் ஒவ்வொரு ஸ்தல புராணத்திற்கும் ஏற்பட்ட முகவுரை. சிம்மவர்மன் சிவகங்கையில் மூழ்கித் தன் குட்டநோய் தீர்ந்து தங்கமயமான சரீரத்தைப் பெற்றமையால் இரண்யவர்மனானான். அதே மாதிரி விருத்தாஜலத்தில் ஒருவன் மணிமுத்தா நதியில் ஸ்நானம் செய்து தனது வேதாள உருவத்தை யொழித்துக்கொண்டு விபசித்து என்ற பெயர்பெற்று, பழமலை நாதருடைய கோயிலைக் கட்டினானாம்! திருவிடை மருதூரில் சோழன் ஒருவனுடைய பிர்மஹத்தி யொழிந்ததாம்! இவ்வாறு ஒவ்வொரு ஆலயத்திற்கும் புராணிகர்கள் கணக்கற்ற மகத்துவங்களையும், சாக்கடையிலும் கேடுகெட்ட தண்ணீரையுடைய பல தீர்த்தங்களையும் கற்பித்திருக்கிறார்கள். தீர்த்தங்களில் மூழ்கினால் உடனே மோட்சம் கிடைக்கும் என்பது ஒருவகையில் உண்மை என்றே கருதலாம். அந்த சாக்கடைக்குழியில் மூழ்கினால், மலேரியா, பிளேக், காலரா முதலிய தொத்து வியாதிகள் வந்து உடனே மூழ்கிய பக்தர்களை எமலோகம் அனுப்பி விடுகின்றதென்பது நிச்சயம். 12 வருஷத்திற் கொருமுறை வருகின்ற மகாமகத்தின்போது கும்பகோணம் மகாமகக் குளத்தில் நீராடி துர்கந்தமான சேற்றைப் பூசிக்கொண்டு வருகின்ற லட்சக்கணக்கான ஜனங்களை நீங்கள் நேரில் பார்த்திருக்கலாம். பற் பலவிதமான தொத்து நோய்களால் அதில் மூழ்கும் ஜனங்கள் பீடிக்கப்பட்டு மாண்டு போகாம லிருப்பதற்காக இங்கிலீஷ் அரசாங்கத்தார், கந்தகம், பினேயில், அக்கினித் திராவகம் முதலிய ரஸாயன வஸ்துக்களை

ஏராளமாக அந்தக் குளத்தில் கொட்டிக் கலக்குகின்றார்கள். அதனுல் தொத்து நோய்கட்கு'ஆதாரமான கிருமிகள் ஜலத்தில் பரிணமித்தது அதிகப்படியாகாமல் அழிந்துபோகின்றமையால் ஜனங்கள் எமபட்டணம் செல்வதினின்றும் காப்பாற்றப் படுகின்றார்களென்பது பிரத்தியட்ச அனுபவம் !

## ஆடுதன் ராஜாக்கள்.

வேதங்களிலும், புராணங்களிலும், சாஸ்திரங்களிலும் குருட்டு நம்பிக்கை வைத்துள அந்தக் காலத்திலிருந்த தமிழ் அரசர்கள் பார்ப்பனர்களால் ஏமாற்றப்பட்டு அவர்களால் தொகுக்கப்பட்ட கட்டுக் கதைகளை நம்பி ஏழைக்குடி மக்களை இம்சித்துச்சம்பாதித்த பெரும்பொருளைக்கொண்டு கோயில் கட்டியும் கும்பாபிஷேகங்கள் செய்தும் அழித்துவிட்டு முடிவில் தாங்களும் அழிந்துபோனார்கள். சமீபத்தில் தஞ்சைமா நகரில் அரசாட்சி செய்த அரசர்களின் சரித்திரங்களைப் பார்த்தால் மிகவும் துக்ககரமாயிருக்கும். பல்லாயிரக்கணக்கான வேலி நிலங்களை மடங்களுக்கும், தேவஸ்தானங்களுக்கும், சத்திரம் சாவடிகளுக்கும், சர்வமான்யம் செய்த இந்த ஆடுதன் ராஜாக்கள் தங்கள் அறிவின்மையால் பெண்டாளப்பட்ட ஆயிரக்கணக்கான குடும்பங்களுக்கு எவ்வித உரிமையும் ஏற்படுத்தாமல் அவர்களைப் பரதவிக்கவிட்டு அழிந்துபோன பரிதாபத்தையும், அந்த ராஜவம்ஸத்தைச் சேர்ந்தவர்கள் நிராதரவாக இன்று துன்பப்பட்டுக் கொண்டிருப்பதையும், தஞ்சைமா நகரில் பிரத்தியட்சமாகப் பார்க்கலாம். இத்தனை கோயில்களையும் இத்தனை மடங்களையும் கட்டி, அவைகளுக்கு ஏராளமான சர்வமான்யங்கள் செய்து நல்ல நிலைமையில் நிறுத்திய இவர்களுடைய அறிவு தமது மனைவி மக்களின் பிற்கால வாழ்விற்கு வழிதேடி வைக்க மறந்துபோன காரணம் என்னவோ ? தெய்வ பித்தமும் ஆரியர் புரட்டுகளும் இவர்கள் மதியை அடியோடு அகற்றிவிட்டிருக்கலாம் என்பதற்கு ஏதாவது சந்தேக முண்டா ? அறிவை இழந்துபோன ஆடுதன் ராஜாக்களே சிதம்பரம் கோயிலைக் கட்டியிருக்க வேண்டுமே யன்றி,

பேயும், பூதமும், மயனும், கட்டியதாகக் கருதப்படுதல் சரியன்று.

தில்லை மூவாயிரவர் திருக்கைலாயத்திலிருந்து ஸ்ரீ நடராஜப்பெருமானுடன் சிதம்பரம் வந்தார்களென்பதை ரூபிக்கச் சரித்திர சம்பந்தமான ஆதாரம் எதுவுமில்லை. பார்ப்பனர்களில் சோழியப் பிராமணர்கள் என்ற ஒரு வகையாருண்டு. இவர்கள் ஆலயங்களில் பலியிடுதல், வாஸ்து சாந்தி செய்தல், முதலிய இழிவான வேலைகளைச் செய்வதால் மற்றைய பார்ப்பனர்களைவிடத் தாழ்ந்தவர்களாக மதிக்கப்படுபவர்கள். யாகங்களில் நடைபெறக்கூடிய உயிர்பலியை சோழியப் பிராமணர்களே செய்வது வழக்கம். பூசாரித் தொழில் அவ்வளவு கண்ணியமான தொழிலாக எக்காலத்திலும் மதிக்கப்பட்டதன்று. சிவன் கோயில்களில் பூஜை செய்யும் குருக்கள் என்ற பார்ப்பனர்களுக்கு ஆதி சைவர் என்ற பட்டமே யொழியப் பிராமணப் பட்டமில்லை. சோழ அரசர்களில் ஒருவர் ஸ்ரீ நடராஜர் ஆலயத்திலுள்ள குற்றேவல்களைச் செய்ய மாதலூரிலிருந்து சில சோழியப் பிராமணர்களைக் கொண்டுவந்ததாயும், பிற்காலத்தில் அவர்களே நாளடைவில் பூஜை உரிமையைக் கைப்பற்றிக்கொண்டதாயும் ஓர் கதையும் வழங்குகின்றது.

சிதம்பர மகாத்மியத்தில் திருஸகஸ்ர முனிவர்களாகிய தீட்சதர்களின் பெருமைகளும், மகத்துவமும் அளவிடமுடியாததாகக் காணப்படுவது ஒருபுறமிருக்க—தில்லைக்கு தீட்சதன், இலங்கைக்கு ராட்சதன் என்ற பழமொழி ஏற்படவேண்டிய காரணம் என்ன? திருஸகஸ்ர முனிவர்களைத் தெரிசித்த மாத்திரத்தில் சகல பாபமும் விமோசனம் என்று சிதம்பரமகாத்மியம் கூறுகின்றது. அத்தகைய உயரிய பெருமையுடைய தீட்சதர்களுக்கு ஏன் ராட்சதப் பட்டம் கிடைத்ததோ? தீட்சதர்கள் அடிக்கடி கணக்கற்ற யாகங்களைச் செய்து ஜீவவதை செய்திருக்கின்றமையால் இயற்கையிலேயே அவர்கள் மகா கொடியவர்களாயிருக்க வேண்டும். இதனாலேயே இவர்களைப்பற்றி இந்தப் பழமொழியும் ஏற்பட்டிருக்கலாம்.

## ஆதித்திராவிடர்கள் ஜோதியில் கலந்தது!

உமாபதி சிவாச்சாரியாருடைய கதையிலிருந்தும், பெற்றான் சாம்பான் கதையிலிருந்தும் ஜாதி மத வேற்றுமைகள் கற்பிக்கப்பட்டவை என்பது நன்கு விளங்கும். சூத்திர பானம் செய்ததாகத் தீட்சதர்களால் ஜாதியிலிருந்து நீக்கப்பட்ட உமாபதி சிவாச்சாரியாரை மறுபடியும் ஜாதியில் சேர்த்துக்கொள்ள ஸ்ரீ நடராஜரே மிகுந்த பிரயாசப்பட்டிருக்கின்றார். செங்குந்தர் வீட்டுக்கஞ்சியைப் பருகினதினால் உமாபதி சிவாச்சாரியார் ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டதுபற்றி மனக்கசப்படைந்து ஸ்ரீ நடராஜர் கொடியேற்று விழாவைத் தடைசெய்து அதன் மூலமாக உமாபதி சிவாச்சாரியாரின் உரிமையை ஸ்தாபித்துவிட்டார். இக்கதையை உண்மை என்று நம்பும் புராண பக்தர்கள் அக்காலத்திலேயே பிராமணர் சூத்திரர் என்ற வேற்றுமை உதவாது என்பது கொள்கை என்பதை மட்டில் ஏன் ஒப்புக்கொள்ளமாட்டேனென்கிறார்கள். பெற்றான் சாம்பான் முத்தியடைந்த கதை மட்டில் மிக விநோதமாயிருக்கின்றது. பெற்றான் சாம்பானுக்கு ஸ்ரீ நடராஜர் நேரில் முத்தி யளிக்காமல்—முத்தி கொடுக்கும்படி உமாபதி சிவாச்சாரியாருக்குத் தன் கைப்படச் சீட்டுக் கவி எழுதி யனுப்பவேண்டிய காரணம் என்னவோ? பெற்றான் சாம்பான் ஆதித்திராவிடனானமையால் அவனுக்கு நேரில் முத்திகொடுக்க ஸ்ரீ நடராஜர் சிறிது தயங்கினார்போலும்.

நெருப்பில் வேகவைப்பதற்குத் தீட்சை என்று பெயர். நந்தனார் முத்தியடையுமுன் ஓமகுண்டத்தில் மூழ்கி எழுந்தார். பெற்றான் சாம்பானும் உமாபதி சிவாச்சாரியார் திருஷ்டியினால் சாம்பலாக எரிந்துபோனான். ஆதித் திராவிடர்களாகிய இவ்விரு பக்தர்களும் இவ்வாறு தீக்கிரையானதையே புராண கர்த்தர்கள் மோட்சமடைந்ததாகவும், ஜோதியில் கலந்துவிட்டதாகவும்,எழுதிவைத்து விட்டார்கள் என்பதிற் சந்தேகமில்லை. ஆதித் திராவிடர்களாகிய நந்தனாரும், பெற்றான் சாப்பானும் உண்மையில் பக்திமான்களாயிருந்திருக்க

லாம். இவ்வாறு ஆதித்திராவிடர்கள் தங்கள் இயற்கையான அநாகரீக நிலைமையை யொழித்துப் பரிசுத்தமாக ஸ்னனம் முதலிய நேம நிஷ்டைகளுடன் தங்கள் ஜாதிக்குரிய மதுபானம், புலால் உண்ணல், முதலிய கொடிய செய்கைகளை மறந்து உத்தமர்களாக மாறியதைக்கண்டு ஏனைய ஆதித்திராவிட மக்களும் இவ்வாறு திருந்திவிட்டால் என்ன செய்கிறது என்று பொறுமைகொண்டே தில்லைப் பார்ப்பனர்கள் நந்தனரையும், பெற்றான் சாம்பானையும் நெருப்பிலிட்டு வாட்டிவிட்டு அவர்களிருவரும் ஜோதியில் கலந்துவிட்டதாகப் புராணத்தில் கதை ஏற்படுத்தி விட்டார்கள். இவ்வாறு அநீதமாக உயிருடன் வதைக்கப்பட்ட நந்தனர் சரித்திரம் தற்போது "நந்தன் சரித்திரம் ஆனந்தம்—" என்று கதைபாடும் சில பாகவதப் பார்ப்பனர்கட்கு வயிற்றுப் பிழைப்பிற்கும் ஆதாரமாக இருக்கின்றது.

"எதற்காகப் பார்ப்பனர்கள் ஆதித்திராவிட பக்தர்களை எரிக்கவேண்டும்"? என்று சிலர் கேட்கலாம். ஆதித்திராவிடர்கள் ஒடுக்கப்பட்ட ஜாதியினராக இருப்பதால் ஜன சமுகத்தில் மிக இழிவான நிலையிலிருந்துகொண்டு மற்றுமுள்ள உயர்ந்த ஜாதியினருக்கு வேண்டிய குற்றேவல்களைச் செய்து வருகின்றார்கள். நந்தன், பெற்றான் சாம்பான் போன்ற உத்தம ஆதித் திராவிடர்களின் உயரிய நிலைமையைக் கண்டு மற்றுமுள்ளவர்களும் இவர்களைப்போல் மாறிவிட்டால் பின்னர் ஏவல் பணிவிடைகளை யார் செய்கிறதென்று பயந்தே தில்லைப் பார்ப்பனர்கள் இவர்களை மோசடியாகக் கொளுத்தி யிருக்கவேண்டும்.

## அபிஷேக ஆராதனைகள் எதற்காக?

இவையெல்லாம் இந்த இருபதாம் நூற்றாண்டில் நம்ப முடியாத கதைகள். நமது நாட்டில் ஆலயங்களின் பேராலும், மதத்தின் பேராலும் செலவிடப்படும் பணத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால் நாம் கண்டிப்பாய்த் திடுக்கிட்டுப் போவோம். இந்த ஆலயங்களெல்லாம் எதற்காக இருக்கின்றன? ஈஸ்வரானுக்கிரகம் என்று நம்மைப் பணக்காரர்

களாக்குதற்காகவா ? இல்லை ! இல்லை ! நம்மை மென்மேலும் எழ்மையாக்குதற்கே. பால் அபிஷேகம், தேன் அபிஷேகம், பஞ்சாமிர்த அபிஷேகம், சந்தனபிஷேகம், இத்தனை அபி ஷேகங்கள் எதற்காகச் செய்யப்படுகின்றன என்று நாம் யூகித்துப் பார்க்கமுடியாதபடி புராண மகத்துவம் நம் அறிவைத் தடைபடுத்துகின்றது. பாலையும், தேனையும், கல்லின் தலையில் ஊற்றுவதினால் யார் என்ன பிரயோஜனத்தை யடையப் போகின்றார்களோ தெரியவில்லை.

மிகவும் சீவகாருண்யமற்ற செய்கையால் தேன் உற்பத்தி செய்யப்படுகின்றது. தேன் கூண்டைப் பிழிந்து தேனை எடுக்கும்போது அதற்குள்ளிருக்கும் பல்லாயிரக் கணக்கான பூச்சிகள் கொல்லப்படுகின்றன. தேன் கூண்டைக் கைப்பற்றுமுன் ஆயிரக் கணக்கான தேனீக்கள் வதைக்கப்படுகின்றன. தேனீ அணு அணுவாகத் தனக்கு ஆகாரமாகவும், தன் குழந்தைகட்கு ஆகாரமாகவும், வெகு பாடுபட்டுக் கிரகித்துச் சேமித்து வைத்திருக்கும் தேனைத் தன் தலையில் கொண்டுவந்து ஊற்றும்படி சர்வேஸ்வரன் தன் பக்தர்களின் சொற்பனத்தில் தோன்றிக் கேட்டுக் கொண்டாரா ? கோயில்களும் அதிலுள்ள சாமிகளும் தேசத்திற்கு எவ்வித இடையூறும் செய்யாமல் பால் தேன் அபிஷேகத்துடனிருந்தால்—அதனால் நமக்கொன்றுமில்லை. எத்தனையோ ஆசாமிகளை அவைகள் சோம்பேறி களாக்கி விட்டன. ஒரு பெரிய தேவஸ்தானத்திலுள்ள அபிஷேக ஆராதனை நைவேத்திய வகைகளைக்கொண்டு, எவ்வித வேலையுமின்றி எத்தனையோ பேர் சோம்பேரிகளாகத் தின்று கொழுத்துக் கொண்டிருக்கின்றார்கள். நமது மதங்களிலும், ஆலயங்களிலும், கடவுள்களிலும், சிறிதும் நம்பிக்கை யில்லாத அயல் நாட்டாராகிய ரயில்வே கம்பெனிக் காரர்கள், நமது மதக் கொள்கைகளைப் பரிகசிப்பதினால் ஏராளமான லாபம் கிடைக்கிறதென்று, திருவிழாக்களைப் பற்றி ஆடம்பரமான விளம்பரங்கள் செய்கின்றார்கள். புண்ணிய க்ஷேத்திரங்களின் விழாக் காட்சிகளையும், கடவுள் களையும் மிக அலங்காரமாகச் சித்தரிக்கப் பட்டிருக்கும்

நேர்த்தியான படங்களுடன் கூடிய இந்த ஆடம்பரமான விளம்பரங்களைக் கண்டு பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் தங்கள் குடும்பத்தாருடன் ஊர்ஊராக யாத்திரை செய்கின்றார்கள். இத்திருவிழாக்கள் எத்தனைபேரை வேலையற்றவர்களாக்குகின்றன ?

மதாவேசங்கொண்டு தெய்வ நம்பிக்கையினால் பலர் கண்மூடித்தனமாக ஆலயங்களில் ஆயிரக்கணக்காகச் செலவிட்டுப் பலத்த அபிஷேக ஆராதனைகள் செய்கின்றார்கள். இந்தியர்களுக்கு எடுத்ததெல்லாம் தெய்வம்தான். ஒவ்வொரு காரியத்திற்கும் நாம் சாஸ்திரமும் நாளும் பார்த்துக்கொண்டு நம் வாழ்நாளைக் கழிக்கின்றோம். அயல் நாட்டார்கள் நம்மைக் கண்டு பரிகசிக்கின்றார்கள். இந்து தேசத்தில் கணக்கிட்டால் பத்து கோடி சாமிகளுக்குமேலிருக்கின்றன. அந்த சாமிகளெல்லாம் சேர்ந்து இதுவரையில் என்ன செய்துவிட்டனவோ ? தெரியவில்லை. நாகரீக முன்னேற்றத்திலும் சாஸ்திரக் கலாவிற்பனத்திலும் அயல்நாட்டார்கள் அதிவேகமாக முன்னேறிச் செல்கின்றார்கள். நாம் சாமிகளின் எண்ணிக்கைகளை நாளுக்கு நாள் விருத்தியாக்கிக் கொண்டிருக்கின்றோம். அமெரிக்கா தேசத்திலிருந்து பேசினால் இன்று கம்பியில்லாத் தந்தி மூலம் இந்தியா தேசத்தில் அதை ஒருவர் கேட்கலாம். சமீபத்தில் வட்டமேஜை மகாநாட்டில் சக்ரவர்த்தியார் செய்த பிரசங்கம் "ஆகாச வசனி" மூலமாக உலகமெங்கும் பரப்பப்பட்டது. நாகரீக உலகம் அன்றாடம் இத்தகைய நூதன நூதனமான புதிய வேட்கைகளில் அதி துரிதமாக ஓடிக் கொண்டிருக்கின்றது.

நமது கடவுள்களெல்லாம் ஒன்றுகூடி யோசித்த போதிலும் இம்மாதிரி அற்புதம் ஒன்றைச் செய்ய முடியுமா என்பதைச் சாவதானமாக ஆலோசித்துப் பாருங்கள். நரியைப் பரியாக்கியவரும், பரியைப் பின் நரியாக்கியவருமாகிய சோமசுந்திரக் கடவுளும், தில்லையில் நித்தியானந்தத் தாண்டவமாடிய நடராஜரும், திருப்பதியிலிருக்கும்

வெங்கடாஜலபதியும், ஸ்ரீ ரெங்கநாதரும், பழனியாண்டவரும், ஒன்று சேர்ந்து ஒரு ஆலோசனைக் கமிட்டி நியமித்து இந்த நாகரீக உலகத்தார் திடுக்கிடக் கூடிய ஒரு அற்புதத்தைச் செய்து காட்டிவிட்டால் பின்பு அவர்கள் ஆதிக்கத்திற்கு இனி எக்காலத்திலும் எக்குறைவும் ஏற்படமாட்டாது என்பது திண்ணம். தில்லைக் கோவிந்தராஜப் பெருமாளை அவருக்குப் பூசை செய்யும் அய்யங்கார்கள் பிரசாத உருண்டைக்காகச் சண்டையிட்டுக்கொண்டு சுமார் ஒருமாத காலம் வரையில் பூஜை நைவேத்தியமில்லாமல் பூட்டிவிட்டார்கள். அதுவரையில் பெருமாள் எப்படி ஆகாரமின்றி உயிருடனிருந்தார்? பின்பு அவர்கள் சச்சரவு நீங்கிப் பெருமாள் கோவில் திறக்கப்பட்டஉடன் ஓமம் வளர்த்து ஓம குண்டத்திலிருந்து தர்ப்பைக் கயிறு மூலம் பெருமாளுக்குப் புத்துயிர் உண்டாக்கப்பட்டது. இதை வடமொழியில் "சம்ப்ரோட்சணம்" என்பார்கள். இதிலிருந்து மனிதர்களே சாமிகளுக்கு உயிர் உண்டாக்குகின்றார்களென்பது பிரத்தியட்சம். அப்படியானல் சாமிகளுக்கு உயிர் உண்டாக்குகிற மனிதன் உயர்ந்தவனா? அவனால் உயிர் பெற்ற சாமி பெரிதா? இந்தக் கேள்விக்குத் தர்க்கரீதியாகச் சரியான பதிலை ஆலோசித்துப் பாருங்கள்.

தில்லைக் கோவிந்தராஜப் பெருமாள் ஆலயத்தைப் புதுப்பிப்பதற்காகப் பழமையாயிருந்த மண்டபத்தை இடித்துக்கொண்டிருந்த ஏழைத் தொழிலாளர்களின் தலையில் அம்மண்டபம் அலங்கோலமாக இடிந்து விழ—அதன் கீழ் சிக்கிக்கொண்டு பலர் உயிர் துறந்தார்கள். இத்தனை ஏழை மக்கள் அநீதமாகக் கொலை செய்யப்பட்டதற்கு இந்தப் பாழும் பெருமாளல்லவோ காரணமானர்? அப்பேர்ப்பட்ட பெருமாளிருந்தாலென்ன, இல்லாமற் போனலென்ன? பெருமாளின் அவதாரமாகிய கிருஷ்ணமூர்த்தி கோவர்த்தன கிரி என்னும் மலையைச் சுண்டுவிரலால் தூக்கி நிறுத்திக் குடையாகப் பிடித்தாராம். அவ்வளவு ஆற்றலுள்ள பகவான் இச் சிறு மண்டபத்தைத் தாங்கி அத்தனை உயிர்

களையும் இரட்சித்திருந்தால் "பழிகாரப் பெருமாள்" என்ற பட்டத்தை யடைந்திருக்கமாட்டாரல்லவா? இதே மண்டபம் உள்ளே பள்ளிகொண்டிருக்கும் பெருமாள் மீது விழுந்திருந்தால் சுகமாகப் பள்ளிகொண்டிருக்கும் பெருமாள் எழுந்திருந்து ஓடிவிடுவாரா? அவர் தலையில் விழுந்திருந்தாலும் கட்டாயம் அவரும் நசுங்கித்தான் போயிருப்பார். ஏதோ நல்லகாலம் தப்பித்துக் கொண்டார். பக்தர்களைக் காத்து ரட்சித்து அவர்களுக்கு வரும் இடுக்கண்களைத் தீர்த்து வைக்கக்கூடிய சர்வ வல்லமையுள்ள தில்லைக் கோவிந்தராஜருக்குப் பாமரஜனங்கள் எண்ணுகிறபடி சக்தியிருந்தால், இத்தனை உயிர்களையும் தப்பவைத்துத் தமது பிரபாவத்தைக் காட்டியிருக்கமாட்டாரா?

## ஆலயந் தொழுவது காலப்போக்கு!

மாலை நேரத்தில் கடற்கரை காலட்சேபம் ஒரு உல்லாசப் பொழுது போக்காயிருப்பதுபோல்—ஆலயத்திற்கும், திருவிழாக்களுக்கும், செல்லுதல் சில நண்பர்கட்டு உல்லாசக் காலப்போக்காக இருக்கின்றது. மனத்தூய்மையடைய ஆலயதெரிசனம் செய்ய வேண்டியது அவசியமாயிருக்கிறது என்பது பலர் கொள்கை. ஆனால் ஆலயத்திற்குச் சென்றால் அங்கு கண்களைக் கவரத்தக்க பல வர்ணச்சேலைகளை அணிந்து கொண்டும், மிதமிஞ்சி அலங்கரித்துக்கொண்டும், சாமி தெரிசனம் செய்யவந்திருக்கும் நங்கைமார்களைப் பார்க்காமல் பக்தர்கள் கண்களை மூடிக்கொண்டிருக்கின்றார்களா? கண்கள் அழகின்மீது பாய்ந்தவுடன், மனம் பகவானிடத்தில் செல்வதெங்ஙனம்? மனிதனுடைய மனம் பரிசுத்தமாயிருந்தபோதிலும் திருவிழாக் காலங்களில் அவன் ஆலயத்திற்குச் சென்றால் கண்டிப்பாக அவன் மனம் நேர்மையான வழியை விட்டு விலகிவிடுகின்றதென்பது பலருடைய அனுபவ சித்தாந்தம். கோயிலுக்கு வரும் பக்தர்களில் ஆயிரத்தில் ஒருவராவது உண்மையில் திரிகரண சுத்தியாகக் கடவுளை ஆராதிப்பவராக இருப்பரோ என்பது சந்தேகம். நமது இந்து தேசம் நாகரீக நடை உடை தினுசுகளில் எவ்வளவு தூரம் முன்னேற்ற மடைந்திருக்கின்ற

தென்பதையும், பாரத சகோதரிகள் அலங்கார வித்தையில் எவ்வளவு பிரசித்தி யடைந்திருக்கின்றார்க ளென்பதையும் ஒரு பெரிய திருவிழாவின் போது நிர்ணயித்துவிடலாம்.

முற்காலத்தில் அளவற்ற செல்வத்தை யழித்துத் தமிழரசர்கள் எத்தனையோ ஆலயங்களைக் கட்டினார்கள். அவர்கள் பெயர் இன்று விளங்குகின்றதா? தற்காலம் அனேகம் தன வைசியப் பிரபுக்கள் லட்சக்கணக்காகச் சிலவிட்டுக் கோவில்கள் கட்டிக கும்பாபிஷேகங்களும், பிராமண சந்தர்ப் பணைகளும், செய்துவருகின்றார்கள். அவர்கள் பெயர் விளங்கு கின்றதா? செட்டி நாட்டரசர் ராஜா அண்ணா மலை (Raja of Chettinad) சிதம்பரத்தில் சர்வகலாசாலை அமைத்தார். இன்று சிதம்பரத்தில் அண்ணாமலை நகரம் என்ற ஒரு புதுப் பெயர் வழங்குகின்றது. இவ்வுலகமுள்ள வரையில் தர்மத்தில் மிகச் சிறந்ததாகிய வித்தியாதர்மத்தி னால் ராஜா அண்ணாமலை செட்டியாருக்குக் கிடைத்திருக் கும் புகழ் என்று மழியாமலிருப்பதற்காக அரசாங்கத்தார் இந்த ராஜா என்ற பட்டத்தை அவர் குடும்பத்திற்கே பரம்பரை பாத்தியமாக வழங்கியிருக்கின்றார்கள். கோயில் கள் கட்டிக் கும்பாபிஷேகங்கள் செய்த செட்டியார்களில் யார் பேராவது இவ்வளவு மேன்மையாக உலகப் பிரசித்தி யடைந்திருக்கின்றதா? அல்லது இனிமேலாவது அடையப் போகின்றதா? ஒரு நாளுமில்லை. கும்பாபிஷேக காலத்தில் திருப்பணி செட்டியாரிடம் ஏராளமாகப் பூரிதானங்கள் பெற்ற குருக்கள்கள் கூடச் சிறிது காலத்தில் திருப்பணி செய்த செட்டியாரின் பெயரை மறந்துவிடுவார்கள்.

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று ஒரு முது மொழி சர்வ சாதாரணமாக எங்கும் வழங்கிவிட்டதால் ஒவ்வொரு ஊரிலும், பெரிய ஆலய மில்லாவிட்டாலும், மரத்தடியில் ஒரு வீரன் கோவிலோ அல்லாது போத்துராசா கோவிலோ கண்டிப்பாயிருக்கின்றது. இந்த வீரன்களும், போத்துராசாக்களும், மாரியாத்தாள் களும், கணக்கற்ற ஆடு கோழிகள் பலியாக வதைக்கப் படுதற்குக் காரணமாக இருக்கின்றன.

## முற்கால புராண கற்பனைகள்.

புராண மகாத்மியங்களைப்பற்றிக் குறை கூறுவதினால் தெய்வ பக்தர்களுக்குச் சலிப்பும் கோபமும் உண்டாகக் கூடும். நமது புராணக் குப்பையைத் தோண்டினால் அதை எப்படி அகற்ற முடியும் என்று எல்லோரும் பிரமித்துப் போவார்கள். பிர்மம், பதுமம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், பவுஷியம், நாரதியம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிர்மகைவர்த்தம், இலிங்கம், வராகம், ஸ்காந்தம், வாமனம், கூர்மம், மச்சம், கருடம், பிர்மாண்டம், என்ற பெயர்களையுடைய 18 புராணங்களுடன்; சனற்குமாரம், நாரதியம், மானவம், வாருணம், பராசரம், தேவி பாகவதம், வாசிஷ்டாலிங்கம், மகேஸ்வரம், ஆதித்தியம், நந்திகேஸ்வரம், சவுரம், சம்பேசம், காளிகம், துருவாசம், சிவதருமம், கபிலம், அவுசனம், காளிகம், என்ற பெயர்களையுடைய 18 உப புராணங்களும், இவை யின்றி எண்ணிறந்த ஸ்தல புராணங்களும், ஸ்தல தீர்த்த மான்மியங்களும், கடவுள்கள் பிரத்தியட்சமாகத் தோன்றி காட்சி கொடுத்து முத்தியளித்த கதைகளும், ஆழ்வாராதிகளும், ஆச்சாரிகளும், சமயக்குரவர்களும், பக்த சிரோன்மணிகளும், பாடின பாமாலைகளும், கோடிக்கணக்காகக் குவிந்து கிடக்கின்றன. கடவுள் எப்படி அடி நுனி யற்று அனாதையாக விளங்குகின்றாரோ, அதைப்போல் புராணக்கதைகளும் அடி நுனி யற்றிருக்கின்றன. ரோமரிஷியின் ஒரு ரோமம் உதிர்ந்தால் ஒரு பிர்மா இறப்பாராம். மூன்றரைக்கோடி பிர்மா இறந்தால் ரோமரிஷியின் மூன்றரைக்கோடிரோமங்களு முதிர்ந்து அவர் இறப்பாரம். அப்படிப்பட்ட ஒரு ரோமரிஷி இறந்தால் அஷ்ட கோண மகாரிஷியின் ஒரு கோணல் நிமிரும். அவருடைய எட்டு கோணமும் நிமிர்வதற்கு எட்டு ரோமரிஷிகள் இறக்கவேண்டும். ஆதலால் இத்தகைய புராண சரித்திரங்களின் வயதைக் கணக்கிட்டுப் பார்த்தால் எத்தனை லட்சம் கோடி வருஷங்களாகுமென்பதை ஆலோசித்துப் பாருங்கள். பிர்மாவானவர் கிருதயுகத்தில் 100 கோடி கிரந்தங்களாக ஒரு புராண

மியற்ற, அதை திரேதா யுகத்திலிருந்த ரிஷிகள் சுருக்கி 118 சம்கிதைகளுள்ள ஒரு கோடி கிரந்தங்களாக மாற்றினார்கள். துவாபரி யுகத்தில் வேதவியாஸர் ஒரு லட்சம் கிரந்தங்களுள்ள பதினெண் புராணங்களாக அவற்றை மறுபடியும் சுருக்கினர்.

இந்தப் புராணங்களை கமலாஸனத்திலிருந்து பிரபஞ்ச உற்பத்தி காலத்தில் பிர்மா புலஸ்தியருக்குச் சொல்ல, புலஸ்தியர் பராஸருக்கும், பராஸர் வியாஸருக்கும், வியாஸர் ரோம ரிஷியின் புதல்வராகிய சூதமா முனிவருக்கும், சூதமா முனிவர் நைமிசாரன்ய மகரிஷிகளுக்கும் சொல்லியதாக விருத்தாந்தம். இவ்வாறு புராணங்கள் யுகாந்திரகாலமாக இவ்வுலகத்தில் பரவிக்கொண்டே யிருந்ததாகத் தாத்பர்யம். நமது சமுதாய உரிமைகள் இத்தகைய புராணங்களாலும், வேதங்களாலும், ஸ்மிருதிகளாலும், சாஸ்திரங்களாலும், கடவுள்களின் பெயராலும் கட்டுப் படுத்தப்பட்டிருக்கின்றன. ஆலயங்களும், தெய்வ வழிபாடுகளும் நம்மை அடிமை வாழ்க்கையி லமிழ்த்திவிட்டன—அமிழ்த்திக் கொண்டே போகின்றன. இதற்குக் காரணம் புராணங்களும், அவற்றை ஆதாரமாகக்கொண்ட கடவுள்களுமேயாகும். யுக்தி அனுபவங்களுக்குப் பொருத்த மில்லாதவற்றைத் திரஸ்கரிக்க வேண்டுமென்பதே பகுத்தறிவாளர்களின் கொள்கை. முற்காலத்திலிருந்த கிரந்தகர்த்தாக்கள் மிகத் தந்திரமாக இப்புராணங்களின் உதவியால் தேவாலயங்களையும், அவற்றில் கணக்கற்ற கடவுள்களையும் உண்டாக்கி; அவற்றிற்கு நித்திய நைவேத்திய பூசைகளும், இரதோற்சவங்களும், திருக்கல்யாணம், சூரசம்மாரம், கார்த்திகை தீப தெரிசனம், பிட்டிற்கு மண் சுமந்த திருநாள், விபசித்திற்கு மோட்சம் கொடுத்த காட்சி, மாணிக்கவாசருக்கு முத்தியளித்த விழா, பிட்சாடனர் தங்கரத உற்சவம், வெள்ளிரத உற்சவம், பஞ்சமூர்த்திகள் திருவீதிவலம், புஷ்பப்பல்லக்கு சேவை, உடையவர் வைரமுடி சேவை, உரியடித் திருநாள், இவைபோன்ற பதினாயிரக்கணக்கான உபதிருவிழாக்களும், சுக்கிரவாரம், சோமவாரம், பிரதோஷம், இவைபோன்ற

தினசரி விசேஷ அபிஷேக ஆராதனைகளும் ஏற்படுத்தி, பிராமணர்களுக்கு வருமானங்களையும், பிராமணர்களின் ஆதிக்கத்தையும் ஸ்தாபித்துவிட்டார்கள். 'குசேலமா முனிவருக்கு ஸ்ரீ கிருஷ்ணபகவானே பூசைசெய்து மகா லட்சுமியே கால் பிடித்து, உபசரித்து அவர் வருமை நீங்கப் பொருள்கொடுத்து அனுப்பியிருக்க நாம் செய்வது பெரிய காரியமா' என நினைத்து எல்லோரும் ஏமாற்றமடையட்டு மென்று குசேலோபாக்கியானத்தைப்போல் எத்தனையோ தந்திரக் கதைகளிருக்கின்றன.

நெய்விட்ட சர்க்கரைப் பொங்கலில்லாவிட்டால் திருப் பாற் கடலில் சேஷ சயனத்திலிருக்கும் பெருமாள் சிதம் பரம் தில்லைக் கோவிந்தராஜராக வந்து பள்ளி கொள்ள மறுதளித்து விடுவாரோ? ஆறுகாலத்திற்கும் பாவாடை யில்லாவிட்டால் தில்லை நடராஜர் கோபித்துக்கொண்டு அயல் நாடுகளுக்குப் பிரயாணப்பட்டு விடுவாரோ? கடவுள் களுக்கு நைவேத்தியம் செய்யப்படும் பிரசாதங்கள் கடைசி யில் சோற்றுக்கடை வியாபாரமாக வல்லவோ முடிகின்றன. முற்காலங்களில் கடவுள்கள் மனிதர்களுக்கெதிரில் தோன் றிப் பேசியும், ஆசீர்வதித்தும், பக்தர்களிடம் விளையாடிக் கொண்டு மிருந்திருக்கின்றார்கள். இக் கலி காலத்தில் இவ் வழக்கத்தை யெல்லாம் அவர்கள் ஒழித்து ஜனங்களுடன் கலந்து உறவாடுதல் என்பதையே அடியோடு மறந்துவிட்டு எங்கேயோ அந்தரத்தில் மறைந்துகொண் டிருக்கின்றார்கள். தற்சமயம் ஜனங்களின் உதவிபெற்று வாழும் மடாதிபதி களும், ஆச்சாரியசுவாமிகளு மிருக்கின்றார்களே யன்றிக் கடவுள்களின் உதவிபெற்று, பக்தர்களைக் கைலாசத்திற் கும், வைகுண்டத்திற்கும் கூட்டிக்கொண்டுபோய் விடக் கூடிய கடவுள் பிரதிநிதிகளைக் காணோம்.

ஸ்ரீ வெங்கிடேசப் பெருமாளுடன் பாச்சிகை ஆடி அவரைத் தோற்கடித்து சூதாட்டத்தில் அவர் தோற்ற கடனை வசூலிப்பதற்காக இன்றுவரையில் ஸ்ரீ வெங்கடா ஜலபதிக்குக் கையில் கிட்டிகட்டி உண்டியில் பணம் வசூல் செய்யும் திருப்பதி மகந்துவும், ஸ்ரீ சங்கர அவதார வம்

ஸத்தைச் சார்ந்தவராகிய ஜெகத்குரு சங்கராச்சார்ய சுவாமிகளும், நோய் பட்டால் தங்கள் தெய்வப் பிரசாதத்தில் நம்பிக்கை யிழந்து எதற்காக இங்கிலீஷ் வைத்தியர்களைத் தேடுகின்றார்கள்? அவர்கள் எந்தக் கடவுள்களிடத்தில் நம்பிக்கை வைத்து அந்தக் கடவுள்களின் பிரதிநிதிகள் தாங்கள் என்று சொல்லிக்கொள்கின்றார்களோ அந்தக் கடவுள்கள் வந்து அவர்களுக்கு வரும் வியாதிகளைப் பிரசாத மகத்துவத்தால் நீக்கினாலென்ன?

மாமூலாக அனுசரித்துவரும் பழய வழக்கங்களைத் தவிர்த்து புது இயக்கங்களை உண்டாக்க முடியு மென்ற எண்ணம் நமக்கு உதிக்கவேண்டும். கிருஸ்துநாதரின் உபதேச மொழிகளை மட்டில் படித்துக் கொண்டிருந்தார்களானால் ஆங்கிலேயர்கள் இவ்வளவு தூரம் முன்னேற்ற மடைந்திருக்கமுடியுமா? ஆழ்வார்களும், ஆச்சாரிகளும், "கனியே! தேனே! கற்கண்டே! இன்னமுதே!" என்று மனங் கசிந்துருகும்படி பாடியிருக்கும் இன்னிசைப் பாடல்களைப் பாடிக்கொண்டும், ஸ்ரீமத் ராமாயண காலட்சேபம் வைத்து சீதைக்கும் ராமனுக்கும் திருக்கல்யாணமும் பாதுகா பட்டாபிஷேகமும் செய்துகொண்டும், நித்திய கர்மானுஷ்டான விதிமுறைகளிற் சிறிதும் பிசகின்றி தேவாலயங்களிற் சென்று "அரஹர மகாதேவா! சம்போ! கோவிந்தா!" என்று கடவுள்களைத் துதித்துக்கொண்டும், காலம்போக்கினால், கடவுள்களின் கிருபை கிடைத்து நமக்குச் சகல காரியங்களும் சித்தியாய்விடுகின்றதா? பக்தர்கள் ஆயிரம் கடவுள்களைத் தியானித்துக் கொண்டிருந்தபோதிலும் கடைசியாக மனிதர்களால் தயார் செய்யப்பட்ட விதவிதமான மோட்டார் வண்டியில்தான் சவாரி செய்ய ஆசைப் படுகின்றார்கள்.

## தற்கால விஞ்ஞான வித்தைகள்!

உலகப்போக்கை அனுசரித்து மற்ற நாட்டிலுள்ளவர்களைப் பார்த்தாவது நமது மாமூல் பழக்க வழக்கங்களைத் திருத்திக்கொள்ள வேண்டாமா? தற்போது உலகத்தில்

பரவிவரும் விஞ்ஞான வித்தைகள் இப்புராணங்களி லிருந்தா கண்டு பிடிக்கப்பட் டிருக்கின்றன? அல்லது கடவுள்களிடத்திலிருந்து உற்பத்தியா யிருக்கின்றனவா? இவ்வுலகத்திற்கே பெருங் கோடீஸ்வரராகிய அமெரிக்கா வாசியாகிய ஹென்ரி போர்ட் துரை (Henrey Ford) தினம் ஒன்றுக்கு 1500 மோட்டார்கள் வரையில் உற்பத்தி செய்கின்றார். இத்தகைய அபரிமிதமான ஒரு தொழில் அபி விருத்திக்கு நமது முன்னோர்கள் சாஸ்திரங்களில் எதையா வது ஆதாரமாகக் கொள்ளமுடியுமா? வல்லபையின் வயிற் றிலிருந்து கோடிக்கணக்கான அரக்கர்கள் உற்பத்தியாகிக் கொண்டே யிருந்தார்களென்றும், விநாயகர் தமது துதிக் கையை அவள் மர்மஸ்தானத்தில் புகுத்தி அரக்கர்களின் பிறவியை யழித்தாரென்றும், இதைப் போன்ற எண்ணி றந்த ஆபாசப் பிரமாணங்கள்தான் கடவுள்களின் சாஸ்தி ரங்களில் நிறைந்திருக்கின்றன. சாஸ்திரக் குப்பைகளையும், எடுத்ததெற்கெல்லாம் "கடவுள் செயல்" என்று மனிதர் களை மட்டிகளாக்கும் தெய்வீகப் பிராப்தங்களையும் உடைத்து வெளியேறின வீரியத்தாலன்றோ, தற்போது அமெரிக்கா தேசம் இவ்வளவு விஞ்ஞான விற்பத்தி யடைந் திருக்கின்றது. மோட்டார் தொழிற்சாலை கட்டியதா லன்றோ ஹென்ரி போர்ட் பெருங் கோடீஸ்வரரானார். கோயில் கட்டிக்கொண்டு கடவுள்களின் கணக்கை அவர் விருத்தி செய்து கொண்டிருந்தாரானால் கோடீஸ்வரராகி இருக்க முடியுமா?

நாகரீக உலகத்தில் காணப்படும் ரயில், மோட்டார், ஆகாயவிமானம், கம்பியில்லாத்தந்தி, பேசும் படக் காட்சி, இவைகளைப் புராணங்களிலுள்ள கடவுள்கள் பார்ப்பார்க ளானால், திகைத்துப்போய் பீதி கொண்டு "இனி இவ்வுலகத் தில் நமக்கு வேலையே யில்லை" என்று இமோத்கிரி பர்வதத்தி லுள்ள எவரஸ்ட் (Everest) சிகரத்தின் உச்சியில் போய்ப் பதுங்கிக்கொள்வார்கள். தற்போதுள்ள ஜீயர்கள், ஏகாங்கி யார்கள், ஆச்சாரியார்கள், ஆழ்வார்கள், பக்தர்கள், அத்தனை பேரும் ஒன்று சேர்ந்து மூச்சுப் பேச்சடக்கித் தவம்

செய்து மன்றாடினாலும் "உங்கள் உலகத்திற்கு நாங்கள் வரவே மாட்டோம், கற்பகோடிகாலமாக நாங்கள் கேள்விப்படாத அதிசயங்களை யெல்லாம் சிருஷ்டித்த நீங்கள்தான் தெய்வம். இதுவரையில் நாங்கள் தெய்வமென்று உங்களை ஏமாற்றிய குற்றத்திற்காக எங்களை ஆகாய விமானத்திலேற்றிப் பனிப்பிரதேசமாகிய ஆர்ட்டிக் மகா சமுத்திரத்தில் (Artic ocean) வட துருவத்திற்குச் சமீபத்தில் கொண்டுபோய் விட்டுவிட்டால் நாங்கள் என்ன செய்வோம். எங்களுக்குப் பயமாயிருக்கின்றது" என்று அசரீரியாகப் பதிலளித்து விடுவார்கள்.

தப்பித்தவறி அந்தக்காலத்திய கடவுள்கள் இந்த இருபதாம் நூற்றாண்டில் வந்து அவதாரம் செய்தபோதிலும், அவர்களுடைய செய்கைகளுக்கு இந்த நாகரீக உலகம் இடந்தருமா என்பது சந்தேகம். குதிரைவாங்கி வருவதற்காக அரசன் கொடுத்த பணத்தைப்போட்டு கோயில் கட்டிய மாணிக்கவாசகரை "நம்பிக்கை துரோகம்" என்ற சட்டத்தினால் இங்கிலீஷ் அரசாங்கம் அவசியம் தெண்டித்தே இருக்கும். சூதாட்டத்தில் பெண்சாதியை வைத்து ஆடித் தோற்றுவிட எவருக்கும் உரிமை யில்லை. பிள்ளைவரம் வேண்டுமென்று மனைவியை ரிஷிகளிடம் விட்டு புத்ரோர்ப்பத்திசெய்துகொள்ள எந்த மடையனும் முன்வரமாட்டான். தாருகாவனத்தில் ஈஸ்வரன் ஆடியதைப்போல் நிர்வாணக் கூத்தாடினால் கட்டாயமாகப் பயித்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் பிடித்தனுப்பி விடுவார்கள். சிறுதொண்ட பக்தரைப்போல் பிள்ளைக்கறி சமைக்க எத்தனித்தால் மரண தெண்டனை கிடைக்கும். ஸ்ரீ நடராஜருக்கும் தில்லை மாகாளிக்கும் நிர்த்தனப் பந்தயம் ஏற்பட்ட காலத்தில், ஒரு காலை உயரத் தூக்கி ஆடியதால்—அதைப்பார்த்து நாணமடைந்து அவ்வாறு ஆட முடியாமல் தோற்றுவிட்ட காளியை வெற்றி கொண்ட தில்லை நடராஜருடைய தாண்ட நிர்த்தனத்தைக் கேலி செய்துவிட்டு — இருகால்களையும் தூக்கிக் கொண்டு ஆடக் கூடிய பெண்கள் எத்தனையோ பேரிருக்கின்றார்கள் என்பதை பயாஸ்கோப் காட்சிகளில் பார்க்கின்றோம்.

ஆதலால் தெய்வபக்தர்கள் இக்காலத்தில் எத்தனை கோயில்கள் கட்டினாலும், எத்தனை திருவிழாக்கள் செய்தாலும், இந்த நாகரீக உலகத்தில் மறுபடியும், ரிஷபம், மயில், யானை, குதிரை, பெருச்சாளி, கழுதை, நாய், முதலிய வாகனங்களின்மீது அந்தரத்தில் தோன்றி—தேவ துந்துமி முழங்க, முப்பத்தி முக்கோடி தேவர்கள், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், நவக்கிரகங்கள், அஷ்டதிக்குப் பாலகர்கள், கின்னர கிம்புருட கருட காந்தர்வ சித்த வித்தியாதரர்கள், அப்ஸர ஸ்திரிகள், முதலிய அந்தரலோக வாசிகள் கற்பக மலர் சொரிய, கடவுள்கள் பிரத்தியட்சமாக வந்து பக்தர்களுக்குக் காட்சி கொடுக்கப் போவதில்லை என்பது நிச்சயம்.

ஆதலால் யோகீஸ்வரரே! நான் இதுவரையில் கூறியவை தற்கால ஆராய்ச்சியின் முடிவாகத் தோன்றியிருக்கும் ஒரு நூதன இயக்கத்தின் பயனாக நான் அறிந்து கொண்ட சித்தாந்தம். சுயமரியாதை உணர்ச்சி நம் தமிழ் நாட்டில் அதி துரிதமாகப் பரவி வருகின்றது. கோயில்களுக்கும், மடங்களுக்கும், சாமிகளுக்கும், இனி நாளடைவில் தானே செல்வாக்கு குறைந்துவிடும். நம் நாடு செழித்து நாமும் அடிமை வாழ்க்கையிலிருந்து விடுதலை பெறவேண்டுமானால், நம் நாட்டிலுள்ள பழய கற்பனைகள் அடியோடு ஒழிந்துபோக வேண்டும். கடவுள்களுக்கு நாம் அழிக்கும் பணத்தைக் கல்வி முன்னேற்றத்திலும, கைத்தொழில் முன்னேற்றத்திலும், உபயோகிக்க வேண்டும். சோப்பேறி மடங்களெல்லாம் கல்வி ஸ்தாபனங்களாக மாறவேண்டும். இந்நிலை யடைந்தால்தான் நாமும் மற்ற நாட்டிலுள்ளவர்களுடன் சம அந்தஸ்து பெறலாம். இத்தகைய நூதன எழுச்சி கண்டிப்பாய் பரவியே தீரும். ஆதலால் இனி கடவுள்களின் செல்வாக்கும், ஆலயங்கள், ஸ்தலங்கள், தீர்த்தங்கள், இவைகளின் மகத்துவமும் செல்லுபடியாக மாட்டா—

என்று டாஷ் முதலியார் பிரசங்கம் செய்து முடித்தார்.

---

## *நடராஜரும் சிவகாமசுந்தரியும் பள்ளியறையில் பேசிக்கொண்டது.

(விநோதன் எழுதியது)

நான் இப்பொழுது வெளியிடப்போகின்ற பரம ரகசியத்தை யாரும் நம்பவேமாட்டார்கள். நான் சொல்லப் போவது நீங்கள் உலகில் இதுவரையில் கேட்டிராத அதிசயம். தில்லை நடராஜரும் சிவகாம சுந்தரியும் பள்ளியறையில் சம்பாஷித்துக்கொண்டிருந்ததை நான் மறைந்திருந்து கேட்டுத் தெரிந்துகொண்டு, அந்த அதிசயமான சம்பாஷணையை எல்லோரும் அறியட்டுமென்று தைரியமாக வெளியிடுகிறேன். சாமியும் அம்மனும் பேசிக்கொண்டிருப்பதை யாராவது அறிந்து வெளியிட்டால் தலை ஆயிரம் சுக்கலாய் உடைந்துவிடும் என்பது சாபம். என் தலை வெடித்துப் போனாலும் போகட்டும். இந்த ரகசியத்தை வெளியிடாமற்போனால் என் வயிறு வெடித்து விடும்போலிருக்கின்றது. உள்ளே அடக்கிக் கொண்டிருக்க முடியவில்லை. ஆதலால் கனவான்களே! "என்னடா? நடராஜாவாவது! பேசவாவது! ஒரே அடியாக மூட்டை விடுகின்றானே!" என்று நீங்கள் என் வார்த்தைகளைக் கண்டிப்பாக அலட்சியம் செய்வீர்களென்பது எனக்குத் தெரியும். அப்படி என் வார்த்தையை நம்பாத கனவன்களைச் சில கேள்விகள் கேட்கின்றேன். கோபித்துக் கொள்ளாமல் பதிலுரைக்க வேண்டும்.

தில்லை நடராஜர் சாப்பிடுவதுண்டா? நன்றாகச் சாப்பிட்டுக்கொண்டு இரவில் பள்ளியறையில் தன் மனைவியுடன் படுத்துறங்குகின்ற கடவுள் ஏன் பேசமாட்டார்? நடராஜர் சாப்பிடுவதில்லை என்றால் கற்கண்டு பொங்கலும், சாம்பா கொஸ்து பாவாடையும் எதற்காக? அறிவாளிகளே! இந்தக்கேள்விகட்குச் சரியான விடையை ஆலோசித்துப் பாருங்கள். அன்றாடம் ஆறுகாலம் அதாவது ஆறுவேளை காலம்

---

* இதன் பின்னால் வரும் வேடிக்கை சம்பாஷணைகளும், யாகத்தைப் பற்றிய கட்டுரைகளும், "திராவிடன்" பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டவை.

ஒன்றுக்குச்சராசரி இரண்டு அல்லது மூன்று மூட்டை அரிசி பொங்கலிட்டுப் படைக்கப்பட்டு, அன்றுடம் தன் மனைவியாகிய சிவகாம சுந்தரியுடன் பள்ளியறையில் படுத் துறங்குகின்ற நடராஜர் ஏன் பேசமாட்டார்? நடராஜர் பேசி யதைப் பொய் என்பவர்கள், அவர்சாப்பிடுவதும் பொய் எனத் தீர்மானித்து இனிமேலாவது பாவாடை போடாம லிருப்பார்களா?.

ஆடி வெள்ளிக் கிழமை—அர்த்த ஜாமத்திற்கு மேல் டூப்பிளிகேட் (Duplicate) உருவமாகிய ஒரு குட்டி நடராஜரைப் புஷ்பப் பல்லக்கில் ஏற்றிவைத்துப் பிரகார பிரதட்சணம் வந்து, பக்தர்கள் உடன் வரப்பட்ட பச்சை, நீலம், ரோஸ், ஆரஞ், முதலிய நானுவர்ண பேத முள்ள மத்தாப்பு சேலைகளைப் பார்த்த வண்ணம் 'ஹர! ஹர! மகாதேவா! சம்போ! மஹாப் பிரபூ!' என்று மெய் மறந்து துதிக்கப் பள்ளி யறையில் கொண்டுபோய் வைத் துக் கதவடைத்தார்கள். பிரசாத உருண்டைகளெல்லாம் விற்பனையான பின் கும்பல் கலைந்தது. எல்லோரும் போய் விட்டார்கள். எனக்கு மட்டில் ஒரு யோசனை பிறந்தது. சாமியும் அம்மனும் இரவில் பூலோக ரகசியங்களைப் பற்றிச் சம்பாஷிப்பார்களென்று நான் பல கதைகளில் படித்திருக் கின்றேனுதலால், இன்று தினம் தங்கியிருந்து நடராஜரும் சிவகாமசுந்தரியும் என்ன பேசிக் கொள்கின்றூர்களென அறிய எனக்கு ஆவலுண்டாயிற்று. நான் பள்ளியறைக்கு அருகாமையில் பதுங்கிக்கொண்டேன். நடுநிசியில் பள்ளி யறையில் ஏதோ சந்தடி கேட்க என்ன வென்று சாளரத் துளை வழியாக அதியாவலுடன் பார்த்தேன்.

"என்ன? சுந்தரி! மிகுந்த முகவாட்டத்துடனிருக் கின்றுய்? அன்றலர்ந்த செந்தாமரை போன்ற உன் முகம் வாட்டத்துடனிருக்கவேண்டிய காரணமென்ன?" என்று கேட் டார் நடராஜர்.

"நான் தங்களிடம் மிகவும் ரகசியமாகச் சில விஷயம் பேச வேண்டியிருப்பதல் இப்படிச் சற்று அருகாமையில்

வாருங்கள்'' என்று நடராஜரைத் தன் அருகாமையில் அழைத்தாள் சிவகாம சுந்தரி.

''என்னைச் சிருஷ்டித்த பாவிப்பயல்கள் ஒற்றைக் காலைத் தூக்கிவிட்டபடியால் என்னால் நடக்க முடியவில்லையே'' என்று வருத்தப்பட்டுக்கொண்டே நடராஜர் நொண்டி யடித்துக்கொண்டு சிவகாம சுந்தரியின் அருகாமையில் வந்தார்.

''காதலரே! விஷயத்தை வெளியிட்டுச் சொல்ல எனக்கு மிகவும் வெட்கமாயிருக்கின்றது. மானக்கேடு! அதை எப்படி வெளியிடுகின்றது''—என்றாள் சிவகாம சுந்தரி.

நடராஜர் :—காமவல்லி! உன் புருஷனாகிய என்னிடம் சொல்லக்கூடாத விஷயம் கூடவா இருக்கிறது. நமக்குள் வெட்கமென்ன? பாதகமில்லை சொல்.

சிவகாம சுந்தரி :—இந்த இருபதாம் நூற்றாண்டில் பெண்கள் வரவர முன்னேற்ற மடைந்து வருகின்றார்கள். நாகரீகம் வளர்ந்து வருகின்றது————

நட :—கண்மணி! ஆம் வாஸ்தவமே! இந்த நாகரீக காலத்தில் உன் முன்னேற்றத்திற்கு என்ன குறை வந்து விட்டது. ஆடையாபரணங்களில் ஏதாவது குறைவா? அலங்காரங்களில் ஏதாவது குறைவா? என் சகோதரர்களாகிய திட்சதர்கள் நவரத்தின ஆபரண பூஷணங்களாலும், உயர்ந்த பட்டாடைகளாலும் உன்னை அழகு படுத்துவதில் ஏதாவது குறைவா?

சிவ :—அதிலெல்லாம் எனக்கு எவ்வித குறைவுமில்லை. தங்களைப் பற்றி நினைக்கத்தான் வருத்தமாயிருக்கின்றது.

நட :—என்னை இப்படி நொண்டியாக்கி விட்டார்களே என்று வருத்தப்படுகின்றாயோ? பாவிப்பயல்கள், என்னைச் செய்யும்போதே அப்படியே ஒருகாலை மேலே நிறுத்தி வைத்து விட்டார்கள். இனி என்ன செய்வது? என்னை

உடைத்துத் துகள் துகளாக நொறுக்கி உருக்கினலன்றி இந்த முடமான உருவத்தை மாற்றி வேறு உருவமாக அமைக்க முடியுமா?

சிவ:—அந்தோ! பரிதாபம்! "கல்லென்ருலும் கணவன், புல்லென்ருலும் புருஷன்" என்றிருக்க வேண்டுமென்பது இந்தியப் பெண்களுக்கு உபதேசிக்கப்பட்ட நீதி. நொண்டியோ முடமோ தாங்கள் உருவத்துடனிருந்தால் போதுமானது. என் கண்ணெதிரில் தாங்கள் துகள் துகளாக நொறுக்கப்படுவதைப் பார்க்கச் சகிக்குமா? தாங்கள் நொண்டியாக இருப்பதைப்பற்றிக் கவலையில்லை. சிறிதளவேனும் சுயமரியாதை யில்லாமலிருக்கின்றீர்களே என்று தான் வருத்தப்படுகின்றேன்.

நட:—சிவகாமசுந்தரி! சர்வ உலகங்களுக்கும் அதிபனுகிய என்னைச் சுயமரியாதை யற்றவன் என்று வாய் கூசாமல் சொல்லிவிட்டாயே? வாயை மூடிக் கொள்.

சிவ:—ஒரு முறையல்ல. பன்முறை கூறுகின்றேன். தங்களுக்குச் சுயமரியாதையுடன் மான அவமானமும் இல்லை. என்? உண்மையை ஆராய்ந்தால் தங்கள் வம்ஸத்திற்கே மான அவமானம் என்பது இன்னதெனத் தெரியாது போலும். தங்களுடன் திருக்கைலாச மலையிலிருந்து இத் தில்லையம்பதியில் குடியேறிய இரண்டாயிரத்துத் தொளாயிரத்துத் தொண்ணூற்ருென்பது பேரில் ஒருவராவது சுயமரியாதையின் உண்மையான தத்துவம் இன்னதென்பதை அறிந்திருந்தால் இவ்வாறு கேவலமாக நடந்துகொள்ள மாட்டார்கள்?

நட:—நீ சொல்வது விளங்கவில்லை. என்னையும் என் இனத்தாரையும் வீணுகத் தூஷிக்காதே.

சிவ:—என் புருஷனுகிய தாங்கள் அருகாமையிலிருக்க தின்று கொழுத்த தடிப்பயல்களாகிய பூசாரிகள் என்னைத் தொட்டு நிர்வாணமாய்க் குளிப்பாட்டுவதும், என் உடம்பைத் தேய்ப்பதும், எனக்கு ஆடை ஆபரணங்கள் அணிந்து விடுவதும், மிகவும் வெட்கக்கேடான செய்கைகளல்லவா?

ஒருத்தரா ? இரண்டுபேரா ? தங்கள் பூசாரிகள் அத்தனை பேரும் முறைபோட்டுக்கொண்டு தினம் என்னைக் கையாள் கின்றார்களே ! இந்த நாகரீக உலகத்தில் பெண்கள் புருஷர் களிடம் வைத்தியம் செய்துகொள்ளக் கூடாதென்று லேடி டாக்டர்களும், பெண்கள் படிப்பு கற்றுக் கொள்வதற்காக உபாத்தியாயினிகளும் ஏற்பட்டிருக்கின்றார்களல்லவா ? அநாகரீகமான பிரதேசத்தில் வசிக்கப்பட்ட காட்டு மனிதன் கூட தன் மனைவியை மற்றெவனாவது கண்ணால் பார்த்து விட்டால்கூடப் பிரமாதமாகக் கோபித்துக் கொள்கின்றான். மானிட ஜென்மத்தில் பிறந்த எந்த மனித வர்க்கமாவது இவ்வாறு தன் மனைவியைத் தாராளமாக அயலான் தொடும் படி பார்த்திருப்பானா ? சர்வலோக நாயகராகிய தங்களுக்கு என் இந்த சுயமரியாதை உணர்சி யில்லையே என்று நான் வருந்துகின்றேன். இவ்வாறு பலர் கை பட்டால் நான் நாளடைவில் இயற்கை உணர்ச்சிகளை இழந்துவிட நேரிடும். ஐவருக்கும் பெண்டாட்டியான துரோபதைக்கும் கேடாய்ப் போய்விட்டேனே.

நட:—கண்மணி ! நீ சொல்லுவது உண்மையே. ஆனால் " தில்லைக்குத் தீட்சதன் இலங்கைக்கு ராட்சதன் " என்று ஒரு பழமொழி வழங்குவதை நீ கேட்டதில்லையா ? வயிற் றுப் பிழைப்பிற்காக உன்னையும் என்னையும் ஜோடித்துக் காட்டிப் பொங்கலிட்டுப் படைத்துத் தின்று கொழுத்து ருசி கண்டவர்கள் உன்னை இனிமேல் ஜோடிக்க வேணடா மென்றால் கேட்பார்களா ? வரும்படி வாயில் மண் விழுந்து விடுமே ? அதற்கென்ன செய்வது.

சிவ :—ஆனால் ஒரு காரியம் செய்யலாம். அப்படிச் செய்தால் என் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். அதுவும் பிரமாதமான காரியமன்று. அதனால் இன்னும் ஏராளமான கும்பல் நம்மை தெரிசிக்கவரும். தீட்சதர்கள் தங்களுக்குப் பூசனைகள் செய்யட்டும். தீட்சதப் பெண்பிள்ளைகள் எனக்கு அபிஷேகஆராதனைகள் செய்யட் டும். நாளை முதல் அப்படிச்செய்து பாருங்கள். நமது

சன்னிதானத்தில் ஏராளமான கூட்டம் கூடும். சுயமரியாதை இயக்கத்தால் நம்மை தெரிசிக்கவரும் பக்தர்களின் எண்ணிக்கை அன்றாடம் குறைந்து வருகின்றது. ஆனால்— பெண்கள், நல்ல வனப்பும், சரீரக் கட்டும், தேஜஸும், பொருந்திய வசிகரமான நமது பெண்கள் பூசனை செய்கின்றார்கள் என்பது தெரியவந்தால், சுயமரியாதைக் கிளர்ச்சி நமது ஆலயம் சம்மந்தப்பட்டவரையில் ஒன்றும் செய்ய முடியாது. அழகிற் சிறந்த உருவங்களையும், அவர்களின் நடையலங்காரத்தையும் கண்டு ஆனந்திப்பதற்காக ஆயிரக் கணக்கான பக்தர்கள் அன்றாடம் வந்துவிடுவார்கள். இந்த யோசனையினால் தங்கள் பூசாரிகளுக்கு மேன்மேலும் சாதகமேயன்றிப் பாதகமென்ன இருக்கின்றது? அதில் தங்களுக் குள்ள ஆட்சேபமென்ன?

நட:—இது நல்ல யுக்தி. சுயமரியாதை இயக்கத்தால் நம்மை ஆராதிக்க வருபவர்களின் தொகையும் நமது செல்வாக்கும் எங்கே குறைந்துவிடப் போகின்றதோ என்று நான் கவலைப்பட்டுக்கொண்டிருந்தேன். உன் யோசனைப்படி நமது வம்ஸத்திலுள்ள அழகே உருவமாகிய பெண்கள் அத்தனை பேரும் முறை போட்டுக்கொண்டு பூசைசெய்ய ஆரம்பித்துவிட்டால் சுயமரியாதைக்காரர்கள் என்ன பிரசாரம் செய்தாலும் நம்மை அசைக்க முடியுமா? ஆதலால் நாளைய தினமே பொதுவார் சொற்பனத்தில் தோன்றி இந்த யோசனையைத் தெரிவித்து விடுகிறேன்.

———

## *பக்தர்கள் சோற்றுச் சண்டை.

## தில்லைக் கோவிந்தராஜரின் திண்டாட்டம்.

தில்லைக் கோவிந்தராஜப் பெருமாளுக்குப் பூசை செய்யும் அர்ச்சகப் பார்ப்பனர்கள் பிரசாத உருண்டைக்குச் சண்டை யிட்டுக்கொண்டு, பூசை நைவேத்திய மில்லாமல் கோவிந்தராஜர் ஆலயத்தைப் பூட்டி விட்டார்கள். ஸ்ரீ நடராஜர் பெருமாள்மீது அனுதாபங் கொண்டு அவர் க்ஷேமத்தை விசாரிக்கின்றார் :—

நடராஜர் :—என்ன சமாச்சாரம்! உடம்பு ரொம்ப இளைத்துப் போயிருக்கிறதுபோல் தெரிகிறதே!

கோவிந்தராஜர் :—என்ன மெதுவாகச் சொல்லுகிறீரே! ஒருவர் எத்தனை நாளைக்குத்தான் பட்டினியா யிருக்க முடியும்? வயிற்றுக்கில்லாவிட்டாலும் சுவாசிக்க நல்ல காற்றாவது வேண்டாமா? ஒருநாளி ரண்டுநாளா? இருபது நாளாகப் பட்டினி யிருந்தால் என்கெதி என்னவாகும்.

நட :—என்ன! நீர் சொல்வது வேடிக்கையாயிருக்கிறது. உம்மை ஏன் இப்படி அடைத்து வைத்திருக்கின்றார்கள். விளங்கச் சொல்லும்.

கோவி:—சொல்வதென்ன! இந்த அய்யங்கார்கள் விஷயம் உமக்குத்தான் தெரியுமே? அல்லும் பகலும் அறுபது நாழிகையும் எழவு சோற்றுச் சண்டைதான். சண்டையிட்டுக்கொண்டு கதவைப் பூட்டிவிட்டு என்னை இப்படி அனியாயமாகப் பட்டினி போட்டுவிட்டார்கள்.

நட :—நீர் ஏதாவது குற்றம் செய்திருப்பீரென்று நினைக்கிறேன்.

கோவி :—என்னுடன் நீர் இன்றைக்குத்தானா பழகுகிறீர். என்னுடைய குணாதிசயங்கள் உமக்குத் தெரியாதா? நான் என்ன குற்றம் செய்திருப்பேனென்று நீரே யோசித்துப் பாரும்.

---

* 17-5-30. திராவிடனிலிருந்து எடுக்கப்பட்டது.

நட :—உமது பக்தர்கள் தங்களுக்கு விரோதமாயிருப்பவர்களை ஒழிக்க வரம் கேட்டுக்கொண்டிருப்பார்கள். நீர் அந்தப்படி அனுக்கிரகம் செய்திருக்க மாட்டீர். அதற்காக இப்படி ஜெயிலில் அடைத்திருப்பார்கள்.

கோவி:—பிரிட்டிஷ் ராஜாங்க ஜெயிலில் கஞ்சியாவது ஊற்றுகிறார்கள். இந்தப் பாழும் அய்யங்கார் ஆதிக்கத்தில் அதுகூட கிடையாது. சிறிதும் இறக்கமின்றி காற்று வருவதற்குக்கூட இடமில்லாமல் பூட்டிவைத்திருக்கிறார்கள்.

நட :—கல்கத்தா இருட்டறை சம்பவம் நடந்தது உமக்கு ஞாபகமில்லையா ?

கோவி :—என்னைத் தினம் வந்து சேவிக்கத் தவறாத எனது அன்பார்ந்த பக்தர்கள் இப்பொழுது என்ன செய்கிறார்களோ தெரியவில்லை. அவர்கள் உள்ளன்புள்ள பக்தர்களாயிருந்தால் என்னை இவ்வளவு நாள் பூட்டிவைத்திருப்பதற்குச் சும்மா இருப்பார்களா ? வெளி வேஷத்திற்காக நாமம் பெரிதாய்ப் போட்டுக்கொண்டு வந்து விடுகிறார்களே. எதற்காகத் தெரியுமா? புளியோதரைக்காகத்தான். அய்யங்கார்கள் நாமம் போடாதவர்களைத்தான் துவேஷிக்கிறார்களே என்று பிரமாதமாகப் பட்டை நாமம் பெரிதாய்ப் போட்டுக்கொண்டு பிரசாத உருண்டைக்காக அன்றாடம் என்னைச் சேவிக்க வந்துவிடுகிறார்கள் போலிருக்கிறது. இதென்ன அனியாயம். கேள்வி முறையில்லையா ஐயா! நான் இப்படி அடைபட்டுக்கிடக்கிற காலத்தில் என் அடியவர்களெல்லாம் எங்கே போய் விட்டார்களோ தெரியவில்லையே. நான் இங்கே அனாதியாகக்கிடந்து மடிகின்றேன்.

நட :—மற்றொரு விசேஷமல்லவா ! அநேகமாய் நாமம் போட்டவர்கள் என்னுடைய சன்னிதிக்கு வருவதே கிடையாது. என்னுடைய சன்னிதியில் புளியோதரை கிடையாது. அதனால்தான் அங்கு வருவதில்லைபோலும்.

கோவி:—வெளிக்கு வைதீகர்களைப்போல் நடித்து புளியோதரைக்காக நம்மை வந்து தெரிசிக்கும் வைதீகப் பிணங்களைவிட, குறுக்கே நூலணிந்துகொண்டு மதத்தினால்

மதப்பிரிவுகளேற்படுத்தி இவ்வுலகத்தில் நம்மால் படைக்கப்பட்ட மனிதர்களிற் சிலரைக் கோயில்களுக்குள் விடாமல் தீண்டாதாரென விலக்கி வைத்திருக்கும் அயோக்கியர்களால் பூசிக்கப்படும் கோயிலுக்கு வராமலிருக்கிற சுயமரியாதைக்காரர்களையே நான் மிகுதியும் விரும்புகிறேன். உமது அபிப்பிராயம் என்ன?

நட:—நீர் சொல்வது சரிதான். ,பக்தர்களைவிட நமக்குப் பூசை செய்யும் பூசாரிகளை முதலில் கவனிப்போம் ஆ! எவ்வளவு ஆபாசம்! எவ்வளவு ஊழல்கள்! அப்படிப்பட்டவர்கள் சிலரைப் பல வழியில் தண்டித்து மிருக்கிறேன். அப்படியிருந்தும் இழிவான செய்கைகள் அவர்கள் செய்யாதது ஒன்றுமே பாக்கியில்லை. வெளிக்கு வேஷம் போட்டுக்கொண்டு உள்ளன்பில்லாமல் பூசை செய்வது எதற்காகத் தெரியுமா? வயிற்றுருண்டைக்குத்தான். சாமிக்கு பூதத்திற்கென்று சொல்லி வயிற்றுச் சாமிக்குத்தான் படைத்துக்கொள்கிறார்கள். நம்முடைய பெயரைச் சொல்லிக்கொண்டு பிழைக்கிறவர்கள் ஒழுங்காகப் பிழக்கவேண்டுமல்லவா? இப்படி அனியாயமாக எத்தனை நாளைக்கையா கோவிலைப் பூட்டிவிடுகிறது. சாமிக்கு பூதத்திற் கென்று சொல்லி ஏழைகளை ஏமாற்றும் அயோக்கியர்களைவிட "கோவிலில்லை! கோவிலில் சாமி இல்லை! எல்லாம் வயிற்றுச் சாமிக்காகத்தான், சாமி என்று பூசைபோட்டுப் பாமர ஜனங்களைப் பார்ப்பனர்கள் ஏமாற்றுகின்றார்கள்" என்று கூறும் சுயமரியாதைக்காரர்களையே நானும் விரும்புகிறேன்.

கோவி:—நம்மை லட்சியம் செய்யாமல் பூட்டி வைத்திருக்கும் கோவிலிருந்தாலென்ன? இடிந்தாலென்ன? குறுக்கு நூலணிந்த கொலை பாதகர்கள்தான் இம்மாதிரி செய்யத் துணிவார்கள். தீண்டாதாரென்றுஒருவகையாம்! அவர்கள் கோயிலுக்குள் வரக்கூடாதாம். ஆ! இந்த அட்டகாசங்களை யெல்லாம் யார் நிவர்த்திப்பார்கள்?

நட:—சுயமரியாதைக் கட்சியைச் சேர்ந்த வீரசிங்கங்களே உம்முடைய கஷ்டங்களை நிவர்த்திக்கக்கூடும். அவர்

களிடத்தில் போய் நீர் முறையிடும், அவர்கள் தக்க ஏற்பாடு செய்வார்கள்.

கோவி:—சரி; அப்படித்தான் செய்யவேண்டும். கதவு பூட்டியிருக்கிறதே. நான் எப்படி வெளியே செல்வேன். எனக்காக நீர் அவர்களிடம் சென்று சிபார்சுசெய்து எப்படியாவது என்னை வெளியேற்றினால் மிக்க உபகாரமாயிருக்கும்.

நட:—ஓய்! பெருமாளே! உம்மீது எனக்கு அனுதாபமில்லாமலில்லை. உமது பரிதாபகரமான நிலைமையைப் பற்றிச் சுயமரியாதைக்காரர்களிடம் தெரிவித்து உமக்கு ஏதாவது உபகாரம் செய்யும்படி சொல்லுகிறேன். உமது விவகாரம் அவர்கள் வரையில் போய்விட்ட தென்பதை அறிந்தால் ஒருக்கால் அர்ச்சகப் பார்ப்பனர்கள் சிறிது கலங்குவார்கள். உமக்கு ஏதாவது விமோசனம் பிறக்கும்.

கோவி:—இந்த உபகாரத்தை என்றும் மறக்கமாட்டேன்.

பின்னும் இரண்டு தினம் கழித்துப் பெருமாளும் நடராஜரும் மறுபடியும் சந்தித்தார்கள்.

கோவிந்தராஜர்:—நடராஜரே! என்மீது உமக்கு இன்னும் தயவு பிறக்கவில்லையா? என் பிராணனில் முக்கால் பாகம் போய்விட்டது. எத்தனை நாளாக அய்யா பட்டினி கிடந்து சாகின்றது? என் பெயரைச்சொல்லி ஊரை எய்த்துப் புளியோதரையும் பொங்கலும் செய்து தின்று கொழுத்த இந்த அய்யங்கார் பயல்கள் நாசமாய்ப்போகமாட்டார்களா? எச்சல் இலைக்கு நாய்கள் கடித்துக்கொள்வது போல் சோற்றுக்குச் சண்டையிட்டுக்கொண்டு என் வாயில் மண்ணை அள்ளிப் போட்டிருக்கின்றார்களே! என்னை எப்படியாவது திறந்து வெளியில் விடும்.

நடராஜர்:—ஓய் பெருமாளே! உமக்காக நான் என்ன செய்தும் பயனில்லை. உம்மை எப்படிச் சிறையினின்றும் விடுதலை செய்வது?

கோவி:—அம்பலவாணரே! உமக்கும் நமக்கும் ஜென்மப்பழி. ஜாதி வித்தியாசம், மத வித்தியாசம், நிற வித்தி

யாசம், முதலிய சகல வேற்றுமைகளும் நமக்குள் ஏராள மாக அமைந்திருக்கின்றன. எனது பக்தர்கட்கும் உமது பக்தர்கட்கும் ஓய்வில்லாச் சண்டை. நம்மிருவரில் யார் பெரியவன் என்று தெரியாமல் நமது புராணங்களும் சண் டையிட்டுக் கொண்டிருக்கின்றன. சிவ புராணங்களில் நான் உம்மை வணங்கித் தொண்டு செய்ததாகவும், விஷ்ணு புராணங்களில் நீர் என்னை வணங்கித் தொண்டு செய்ததாக வும் எழுதப்பட்டிருக்கின்றது. அப்படியிருந்தும் ஆதியில் தாருகாவன ரிஷிகளின் செருக்கடக்க நீர் பிட்சாடண உரு வந்தரித்துப் போனபோது மோகனவதாரம் எடுத்த என்னை நீர் காதலித்ததிலிருந்து, இந்த இடத்தில் மட்டும் நாம் இது வரையில் பழய அன்பை ஒருவர்க் கொருவர் மறக்க முடியா மல் ஒற்றுமையாக வாழ்ந்து வருகின்றோம். பக்தர்கட்கு நாமிருவரும் ஒரே சன்னிதானத்தில் அமர்ந்து காட்சி கொடுக்கும் அதிசயமே சிதம்பர ரகசியம் எனப்படும். இந்த க்ஷேத்திரப் பெருமைக்கும் இதுவே காரணமாகும்.

நட :—ஓய்! ஓய்! பெருமாளே! உமது பேச்சை நிறுத்தும். என் வயிற்றெரிச்சலைக் கிளப்பி விடாதீர். அந் தக்காலமெல்லாம் மலையேறி விட்டது. சிதம்பரமாவது! ரகசியமாவது! தற்கால சிதம்பர ரகசியம் எங்கே இருக் கின்றது தெரியுமா? என் பெருமை குறைந்து விட்டது. அக்கிரமத்தால் கைலாயத்திலிருந்து என்னுடன் வந்த தில்லை மூவாயிரம்பேர் தற்சமயம் 300க்குக் கூட வழி யில்லாமல் அழிந்து போனார்கள்.

கோவி:—அது போகட்டும். என் ஆலயத்தைத் திறந்து விட என்ன ஏற்பாடு செய்யப்போகின்றீர். நான் இப் படியே பூட்டப்பட்டுக் கிடக்க வேண்டியதுதானோ?

நட :—ஐயா பெருமாளே! உமக்காக வெகு தூரம் பிரயாசை எடுத்துக்கொண்டு நான் சுயமரியாதைக்காரர் களிடம் உமது ஆலயத்தைத் திறந்துவிடும்படி கேட்டுக் கொண்டேன். "சே! அந்த கொலைகாரப் பெருமாளை நாங்கள் பார்க்க முடியாது" என்று அவர்கள் உம்மீது பிரமாதமாகக் கோபித்துக் கொண்டார்கள்.

கோவி :—நீர் ஏற்கனவே என்னிடம் தெரிவித்ததின் பேரில் சுயமரியாதைக்காரர்களால் எனக்கு விமோசனம் ஏற்படக் கூடுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என்மீது அவர்கட்குக் கோபம் ஏற்படக் காரணமென்ன ?

நட :—இந்தக் கலியுகத்தில்கூட "உமக்கு உபகாரம் செய்ய வருபவர்கட்கு அபகாரம் செய்கிறதென்கின்ற" உமது ஜாதித் தொழிலை நீர் கைவிட வில்லை போலும்.

கோவி :—நடராஜரே! "இளைத்தவன் பெண்டாட்டி ஊருக்கெல்லாம் வைப்பாட்டி" என்பதுபோல் எனது தற்கால பரிதாபகரமான நிலைமையைப் பார்த்து நீரும் என் மீது தப்பான அபிப்பிராயம் கொண்டுவிட்டது எனது கால வித்தியாசமேயாகும்.

நட :—என்ன ஐயா அப்படிச் சொல்லுகின்றீர். முன்னம் வாமன அவதாரம் எடுத்த காலத்தில் உமக்கு 3 அடி மண் தானம் கொடுத்த மாகபலியைப் பாதாள உலகத்தில் மிதித்து நசுக்கி விட்டீர். கிருஷ்ணாவதாரத்தில் தன் தருமத்தை யெல்லாம் உமக்குத் தாரைவார்த்துத் தந்த கர்ணன் உயிரை அனீதமாக அபகரிக்கும்படிச் செய்தீர். அவை யெல்லாம் பழங்கதை. இந்தக் காலத்திலாவது நீர் யோக்கியதையாக இருக்கக் கூடாதா ? இடிந்து உமது தலையில் விழக்கூடிய நிலையிலிருந்த இந்தப் பாழ் மண்டபத்தைப் புதிப்பிப்பதற்காக இடிக்க வந்த ஏழைக் கூலியாளர்களில் எத்தனையோ பேர் குடல் பிதுங்க நசுங்கும்படி வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தீர். இத்தனை பேரும் அலங்கோலமாக மண்டபம் இடிந்து விழுந்து சாகும்போது நீர் சுகமாகப் பள்ளிகொண்டிருந்தீரோ ? இந்த மகா பாதகத்திற்குத் தான் உம்மைப் பட்டிணி போட்டு வைத்திருக்கின்றார்கள் போலும்! 'இந்த கொலைகாரப் பெருமாளை நாங்கள் பார்க்கவேமாட்டோம்' என்று உமக்கு சுயமரியாதைக் காரர்கள் பேட்டி கொடுக்க மறுத்துவிட்டார்கள். ஓய்! நீர் இவ்வாறு புத்தியில்லாமலிருக்கலாமா ? நம்முடைய பெருமையெல்லாம், ஆதிக்கமெல்லாம், அழியும் காலம் சம்ப

வித்திருக்கின்றது. "ஆலயங்களை உடைத்தெறியவேண்டும். சாமிகளைத் தூள் தூள்களாக நொறுக்கி எறியவேண்டும்" என்று சுயமரியாதை முரசு முழங்குகின்ற இந்த 20-ஆம் நூற்றாண்டில் உமது பழைய ஜாதித்தொழிலைக் காட்ட வந்தது குறும்புத்தனமல்லவா ?

கோவி :—நீர் சொல்வது உண்மையே. என் கஷ்ட காலம் அப்படி நேர்ந்து விட்டது. அதைப் பற்றி இனி நான் என்ன செய்வது.

நட :—போனது போகட்டும். இனிமேலாவது யோக்யதையாயிரும். எப்படியாவது இன்னுஞ் சில நாளில் உமது ஆலயத்தின் கதவு திறக்கப்படும். அஃதன்பின் அந்த அய்யங்கார்களைப் பூசை செய்ய வேண்டாமென்று கட்டுப்பாடு செய்துவிட முடியுமா ?

கோவி :—இந்தப் அய்யங்கார்களுடன் தங்களுக்குப் பூஜைசெய்யும் திட்சதர்கட்கும் சேர்ந்து ஆபத்து தானுகவே வந்திருக்கின்றது. இந்த ஊரில் ஆலயப் பிரவேச சத்தியாக்கிரகம் நடக்கப்போகின்றதாம். இந்தப் பூசாரிகளின் வாயிலெல்லாம் மண்விழப் போகின்றது.

நட :—பெருமாளே ! என் சகோதரர்களாகிய திட்சதர்களைவிட ஆதித்திராவிடர்கள் எவ்வளவோ நல்லவர்கள். ஒழுக்கத்திலும் குணத்திலும் சிறந்தவர்கள். இந்தப் பூசாரிகளின் கொழுப்பு அடங்குவதற்கு அவசியம் சம உரிமை ஸ்தாபிக்கப்பட வேண்டும். ஆதித்திராவிடர்கள் அனைவரும் நம் ஆலயத்தில் விடப்படவேண்டும். கூடிய சீக்கிரத்தில் அத்தகைய காலம் வருமாறு அனுக்கிரகித்திருக்கின்றேன்,

கோவி :—அந்த ஆதித்திராவிடர்களாவது வந்து பூட்டை உடைத்து என்னை விடுவிக்கக் கூடாதா ?

நட :—பொருமையுடனிரும். சீக்கிரம் விமோசனம் பிறக்கும்.

கோவி:—நடராஜரே! எனக்குச் சோறுவேண்டாம். தண்ணீர் வேண்டாம். உப்பு சத்தியாக்கிரகிகளாவது வந்து என்னைத் திறந்து வெளியில் விட்டால் நான் உப்பு காச்சுவதற்காவது ஓடிப்போய் விடுகின்றேன். உப்பு காய்ச்சி விட்டு நான் ஜெயிலுக்குப் போனல் தில்லைக் கோவிந்தராஜப்பெருமாளாகிய என்னை "எ" வகுப்புக் கைதியாக அரசாங்கத்தார் எடுத்துக்கொள்வார்கள் இங்கே அநீதமாகப் பட்டினி கிடந்து சாகிறதை விட ஆங்கிலேயர் ஜெயிலிலிருந்தால் சௌகர்யமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கலாம்.

---

## * யாகம்.

### தேவதைகளுக்குக் கள்ளும் மாமிசமும்.

" அவிசோரிந்தாயிரம் வேட்டலின்—
ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை நன்று "

என்றார் பொய்யாமொழிப் புலவர். சீவ காருண்யத்தையே சிறந்த தர்மமெனப் போதிக்கும் தமிழ் மறைக்கும் சண்டாள தத்துவத்தையும், சித்ரவதைகளையும் புகட்டும் ஆரிய மறைகட்கும், உள்ள நீதிபேதத்தை ஆராய்ந்தறியாமையே "பிராமண பக்தி" என்னும் பேதமைக்குக் காரணம். வேதங்களில் சொல்லப்படுகின்ற யாகங்களையும், அவற்றின் பிரிவுகளையும், மனதினாலும் நிர்மாணிக்க முடியாத ஆபாச மான செய்கைகளையும் கேள்விப்பட்ட அளவில் சுத்தமான இருதயத்தையுடைய எந்தப் பிராமணரல்லாதாருடைய இரத்தமும் கொதிப்பேறாமல் இருக்காது. யாகம் எனப் பெயரிட்டுச் சண்டாளப் பார்ப்பனர்கள் வெகு காலமாக ஆடுகளையும், மாடுகளையும், வதைத்து நசுக்கிப் பொரித்துப் புசித்து வருகின்றார்கள். யாகத்தில் செய்யப்படும் கொலை பாபமற்றதென்றும், யாகத்தில் உயிரைவிடும் பிராணிகள் மோக்ஷமடைவதாகவும், சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஸோம பானம் என்பது கள்குடி. யாகங்களில் தேவதைகளுக்குக் கள்ளும் மாமிசமுமே படைக்க வேண்டும். "ஆத்மாக்களு டைய நன்மைக்கு ஏதுவாகிய யாகத்தின் பொருட்டு பிர்மா மிருகங்களைச் சிருஷ்டித்தார்" என மனுஸ்மிருதியில் காணப் படுகின்றது. யாகத்தில் கொல்லப்பட்ட மிருகத்தின் அவய வங்களைத் தேவர்களுக்குப் பங்கிடவேண்டிய முறை ஆபஸ் தம்பசிரவுத சூத்திரத்தில் மிக விரிவாக எழுதப்பட்டிருக் கின்றது.

---

* 14-6-30. "திராவிடனில்" தென்பாதி. T. S. கனகசபையால் எழுதப்பட்டது.

## வேதத்தின் ரகசிய ஊழல்கள்.

"ஈரல், நாக்கு, மார்பு, இரண்டு பக்கங்களிலும் உருண்டை வடிவமாக இருக்கும் சதை, இடதுகை, இடது விலாப் பக்கம் புட்டத்தின் மூன்றில் ஒன்று, இவைகள் தேவர்களுக்காகவும்; வலது கை, இடது துடையின் மேற்புறம், புட்டத்தின் மூன்றில் ஒரு பங்கு, இவைகள் சிருஷ்டிக் கிருத ஹோமத்தின் பொருட்டும், யக்ருத்தை போன்றதும், திலகமென்ற பெயருள்ளதுமான மாமிசம், நுரை ஈரல், சிறு குடல், மடி கொழுப்பு, வாய், இவைகளையெல்லாம் எடுக்கவேண்டும்". இப்படி எடுக்கப்பட்ட பாகங்களைப் பங்கிடும் முறை "**ஐதரேயப் பிராம்ணத்தில்**" நன்ருகக் கூறப் பட்டிருக்கின்றது. "நாக்கு பிரஸ்தோதவிற்கும், பருந்தின் வடிவத்தையுடைய மார்பு உத்காதாவிற்கும், கழுத்தும், கொண்டையும் ப்ரதிஹர்த்தாவிற்கும், வலது துடை ஹோதாவிற்கும், இடது துடை பிர்மாவிற்கும், வலது துடையின் அடிப்பக்கம் மைத்திராவணனுக்கும், இடது பாகம் பிராய்ணுச் சம்ஸிக்கும், வலது விலாப் புறமும் வலது தோளும் அக்வாயுவிற்கும், இடதுதோள் ப்ரதிப்ரஸ் தாதாவிற்கும், வலது கை நேஷ்டாவிற்கும், இடது கை ஸதஸ்யனுக்கும், வலது கால் போஜனதாதாவாகிய கிருகபதிக்கும், இடது கால் கிருகபதி மனைவிக்கும்..........
.............................................................தோலை சுத்தியை உச்சரித்த பிராமணனுக்கும், கொடுக்கவேண்டும். இடை எல்லோரும் பகிர்ந்து கொள்ளலாம். அல்லது ஹோதா தனியாகவோ எடுத்துக் கொள்ளலாம்—என இவ்வாருகப் பலருக்குப் பாகம் செய்யப்படுகின்றது. இந்தப் பாகப் பிரிவினையில் தோல், மயிர் முதலியனவும் நீக்கப்படவில்லை. ப்ரஸ்தோதா, உக்காதா, ப்ரதிகர்த்தா, முதலிய பெயர்கள் யாகப் புரோகிதர்களின் பெயர்களாகும். ஐதரேய ப்ராஹ்ம்னத்திலுள்ள இந்த சூத்திரத்தில் கொலை செய்யப் பட்ட மிருகத்தின் எல்லாப் பாகமும் புரோகிதர்களுக்கு பங்கிடப்பட்டிருப்பதாக விபரமாக இருக்கவும், இதை மறைத்துப் பார்ப்பனர்கள் சூதாக "வபை" என்ற ஒரு

பாகத்தை மட்டில்தான் எடுப்பதாயும், அதையும் தீயிலிட்டு ஹோமம் பண்ணிவிடுவதாயும் கௌரவமாகச் சொல்லிக் கொள்கின்றார்கள். உண்மையை உற்று நோக்கின் இச்சண் டாளப் பார்ப்பனர்கள் கொலை செய்யப்பட்ட மிருகத்தை ஒரு சிறிதும் விடாமல் அப்படியே தங்கள் வயிற்றில் பூரண ஆஹுதி செய்து கொண்டிருக்கின்றார்கள் என்பதாக விளங்குகின்றது. யாகத்தில் கொலையுண்ட பசு, ஆடு முதலியவைகளுக்கு உயிர் கொடுத்தனுப்புவது அந்தக் காலத்திய வழக்கமாம். இப்படிப் பங்குபோட்டுச் சாப் பிட்ட பின் எதை எழுப்புவதோ—தெரியவில்லை.

## உயிர்களை வதைக்கும் பார்ப்பனர்.

சூத்திரன் வேதத்தைப் படித்தாலும், அல்லது கேட்டாலும் நாக்கை அறுத்தெறியவேண்டு மென்றும், ஈயத்தைக் காய்ச்சி ஊற்றவேண்டு மென்றும், மனுஸ்மிருதி மூலம் சூத்திரர்கள் பயமுறுத்தப்பட்டுப் போனபடியால் இந்த உண்மைகளை அக்காலத்தில் அவர்கள் அறிந்து கொள்ள முடியாமற் போனார்கள். இந்தக் காலத்தில் அந்தக் குருட்டு வேதங்களும், புராணங்களும், வெகு எளிதில் மொழி பெயர்க்கப்பட்டும், அச்சிடப்பட்டும், மலிந்து கிடக்கின்றன. பலர் அவற்றை வாங்கிப் படித்துமிருக் கின்றார்கள். இந்த உண்மைகளையும், மந்திரத்தினால் ஆடு சாகவில்லை, பார்ப்பனச் சண்டாளர்கள் அதன் பீஜத்தைப் பிசைந்து வதைக்கின்றார்கள், என்பதையும் பிரத்தியட்ச மாகப் புகைப்படமெடுத்து "திராவிடன்" வெளியிட்டு இருந்தும், இன்னும் யாகங்கள் நடை பெறுவதும், அவற் றைப் பிராமணரல்லாதார் ஆதரிப்பதும் அதற்காகப் பொரு ளிழப்பதும் அதிசயமல்லவா?

சென்ற சிலமாதங்களுக்கு முன் சிதம்பரம் கீழ வீதி யில் "சோமயாகம்" நடைபெற்ற காலத்தில் பல ஆடுகள் வதைக்கப்பட்டன. அதற்காகப் பிராமணரல்லாதார் பலர் பொருளுதவியும் செய்திருக்கின்றார்கள். இந்த அற்ப ஆடு யாகம் செய்த இதே பார்ப்பனர்கள் "பௌண்டரீக யாகம்"

செய்ய முடியுமா என்று நாம் கேட்கிறோம். இந்த நாகரீக காலத்தில் அந்த யாகத்தை நடத்தச்சொல்லிப் பார்த்தால் மிக வேடிக்கையாக இருக்கும்.

## பௌண்டரீக யாக விநோதம்.

பௌண்டரீக யாகம் என்பது யாக குண்டத்தின் மீது புஷ்பப் பந்தலிட்டு அப்பந்தலில் ஒரு பிராமண விதவையையும், பிரமச்சாரியையும், ஒன்றுபடச்செய்து அவர்களுடைய சுக்கில சுரோணிதங்கள் யாகவேதியில் விழுகின்ற காலத்தில் பூரண ஆஹூதி செய்வது. இத்தகைய ஆபாசமான செய்கை வேதத்தின் பெயரால் செய்யப்பட்டிருப்பதென்றால் அந்த வேதத்திற்கு எவ்வளவு தூரம் பெருமை கொடுக்கலாம்.

தில்லைவாழ் அந்தணர்கள் எத்தனையோ ஆடு நசுக்கும் யாகம் செய்திருக்கின்றார்கள். அவை யெல்லாம் உண்மையெனில் ஏன் இத்தகைய பௌண்டரீக யாகம் ஒன்றைச் செய்யக்கூடாது ? இத்தகைய யாகம் செய்வதற்குப் பொருளும், அதைத்தெரிசிப்பதற்கு மதியினர்களும், விதவையும், கொட்டாப்புளி போன்ற கொழுத்த பிர்மச்சாரியும், அகப்படுவது பிரமாதமான காரியமன்று. இந்த ஆபாசமான செய்கையைக்கண்டு அரசாங்கத்தார் தெண்டித்துவிட்டால் என்ன செய்கிறதென்று தில்லைவாழ் அந்தணர்கள் பயப்படுகின்றார்கள் போலும்! மகாராணியார் அவர்களுடைய ஆக்ஞைப்படி மதத்தின் பெயரால் செய்யப்படும் எவ்வித ஆபாசங்களையும், அரசாங்கத்தார் கவனிக்கமாட்டார்கள். ஆதலால் சிதம்பரத்தில் பௌண்டரீக யாகம் ஒன்று நடத்தப்பட வேண்டுமென்று பலர் விரும்புகின்றார்கள். சமீபத்தில் யாகம்செய்த பார்ப்பனர்களாவது முயற்சிசெய்து பௌண்டரீக யாகம் ஒன்றை நடத்திவைப்பார்களென்று நாமும் பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்கின்றோம்.

## அஸ்வமேதம்.

தில்லை நடராஜரையும், தீட்சதர்களையும், பார்ப்பனர்களையும், "திராவிடன்" இகழ்வதாகக் குறைபடும் நண்பர்கள்—சாஸ்திரங்களிலும்,வேதங்களிலும், ஸ்மிருதிகளிலும், கூறியிருக்கப்பட்ட பௌண்டரீக யாகத்தைச் செய்யும்படி ஏற்பாடு செய்துவிட்டால், அதன் பின் நடராஜரையும், அவர் ஆட்டத்தையும், ஒரு மாதம் பூட்டப்பட்டு பட்டினி கிடந்து உயிர் ஒடுங்கிய பின், தர்ப்பைக் கயிற்றின் மூலம் உயிர்விடப்பட்டிருக்கின்ற தில்லைக் கோவிந்தராஜப் பெருமாளையும், அவசியம் நம்பலாம். இன்னும் எத்தனையோ விதமான கொலைகளும் பாபங்களும் யாகங்களினாலேற்படுகின்றன. சயன கர்மத்திற்குரிய கட்டிடங்களைக் கட்டுவதற்கு செங்கற்களைச் சேர்த்துக் கட்டும்போது தவளைகளையும் மரவட்டைகளையும் கொன்று பசையை எடுத்துக் கட்டும்படி யாக்ஞவல்க்கிய ஸ்மிருதியில் சொல்லப்பட் டிருக்கின்றது. இங்ஙனம் கொலையே பிரதானமாகவுள்ள யாகமே சுவர்க்கத்திற்கு ஏறுவதற்குச் சான்றாகக் கருதப்பட்டு செய்யப்படுகின்றது. யஜுர் வேதம் அத்தியாயம் 23ல் மகீதர பாஷ்யத்தில் அஸ்வமேத யாகத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கும் மகா ஆபாசக் களஞ்சியமான விஷயங்களைப் படித்தால் அயோக்கியப் பார்ப்பனர்களுடைய கேவலமான இழிசெய்கைகளைக் கண்டனம் செய்யாமலிருக்க முடியாது. அஸ்வத்துடன் பெண்களைப் படுக்கவைத்து ஸ்திரீ புருஷ சம்மந்தத்திற்குரிய செய்கைகளை இயற்றுவதும், முற்றிலும் அநாகரீகமான பிரதேசத்திற்கூட கேட்டிராத சம்பாஷணைகளும், அஸ்வமேதயாக சம்மந்தமாக யஜுர் வேதத்தில் காணப்படுகின்றன. ஆரியர்கள் விபசாரத்தை விளையாட்டாகவே கருதி வந்தார்களென்பது அஸ்வமேதம், பௌண்டரீகம், முதலிய யாகங்களால் அறியக்கிடக்கின்றது. ஒன்றிற்கொன்று சம்மந்தமில்லாத ஆபாசமொழிகள் நிறம்பிய வேதங்களின் சொரூபத்தைப் பிறர் அறிந்துகொண்டால் கேலிக் கிடமெனப் பயந்து வேதங்களைக் கேட்ட சூத்திரன் காதுகளில் ஈயத்

தைக் காய்ச்சி விட்டிருக்கின்றார்கள். இவ்வாறு யாகங்களின் பெயரால் ஆரியர்கள் கணக்கற்ற அக்கிரமங்களையும், உயிர் வதைகளையும், செய்திருக்கின்றார்கள். யாகத்தின் பெயரால் கள் குடிப்பதற்கு சோமபானம் என்று பெயர். "கள்ளைக் குடித்துக்குடித்து மெய்மறந்து தரையில் விழுமளவும் குடிக்கவேண்டும். தெளிந்தபின் எழுந்து மறுபடியும் குடிக்க வேண்டும். அப்படிச் செய்பவர்களுக்கு மறுபடி பிறவியில்லை" என்று மகா நிர்வாண தந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் யாகங்கள் என்பது மதுபானமும், மாமிசபட்சணமும், தவிர்த்துப் பிரிதொன்றுமில்லை என்பது சாஸ்திரப் பிரமாணங்களால் நன்கு புலனாகின்றது. அப்படியிருந்தும் இந்தக்காலத்திலும் இத்தகைய யாகங்கள் நடைபெற்றும் வருகின்றன.

சென்ற வாரத்தில் சிதம்பரம் கீழவீதியில் யாகம் நடந்தகாலத்தில் பார்ப்பனர்கள் ஆட்டைப் பிடித்துக்கொண்டு அதன் பீஜத்தை அமுத்திக் கொன்று கொண்டிருக்கையில் எடுத்த புகைப்படம் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றது. நடராஜரையும், தீட்சதர்களையும், பார்ப்பனர்களையும் நாம் இகழ்வதாகப் பலநண்பர்கள் நம்மீது வருத்தப் படுகின்றனர். பார்ப்பனர்களின் இழிசெய்கைகளையும், துர் நடத்தைகளையும், வெளியிட்டு மதத்தின் பெயராலும், கடவுளின் பெயராலும் நாம் எய்க்கப்படாமலிருப்பதற்கு எச்சரிப்பதை இகழ்ச்சி என எங்ஙனம் தவறுதலாக அர்த்தம் செய்து கொள்ளலாம். ஸ்ரீநடராஜப்பெருமானுடன் திருக்கைலாயத்திலிருந்து வந்த தில்லை மூவாயிரம்பேர் எங்கே? தற்சமயம் கணக்கிட்டுப் பார்த்தால் முன்னூறு ஆசாமிகூட இல்லையே! தெய்வீகப் பிறவியாகிய இவ்வளவுபேரும் எவ்வாறு அழிந்துபோனார்கள். இதைப்பற்றி அறிவாளிகளே யோசித்துப் பாருங்கள்.

———

## * அஜமேதம்.

பிரம்மாவின் முகத்திலிருந்து தோன்றியவர்களும் உலக மக்களுக்கும் கடவுளுக்கும் மத்தியஸ்தராயிருந்து மக்களை மோட்ச உலகத்துக்கு அனுப்புகிறவர்களும் பிரம்மத்தை யறிந்தவர்களும் பூலோக தேவர்களுமான பிராமணர்கள் சிதம்பரத்தில் "அஜமேதம்" என்னும் ஆடம்பரப் பெயரால் ஆட்டைக் கசாப்புச் செய்த மகா பாதகச் செயலைப் பற்றிய ஒரு நீண்ட வரலாற்றை வேறோரிடத்துப் பிரசுரித்திருக்கிறோம்.

ஒரு புறாவைக் காப்பாற்றும் பொருட்டு சிபிச் சக்கரவர்த்தி தன் உடம்பிலிருந்து தசையை அறுத்துக்கொடுத்து ஒருவேடன் பசியைத் தீர்த்ததாக ஆரிய புராணங்களில் ஒரு கதை காணப்படுகிறது. அக்கதை பொய்யோ மெய்யோ எப்படியானாலும் சரி, உயிர்க் கொலை பாபமென்பதையும், உயிர்க் கொலையைத் தடுப்பதற்காக மக்கள் தம் உயிரையும் துறத்தல் அவசிய மென்பதையும் அக் கதை வலி யுறுத்துகின்றது. ஆரிய புராணங்களெல்லாம் பெரும்பாலும் ஆபாசமானவைகளாயும் இயற்கைக்கு முரணானவைகளாயும் இருந்தாலும் உயிர்க் கொலை பாபமென்பதை விளக்கும் கதைகள் பல அப் புராணங்களில் காணப்படுகின்றன. தமிழிலயக்கியமோ உயிர்க் கொலை மகா பாபமென்பதை தெள்ளத் தெளிய எடுத்துக் கூறுகின்றது. தமிழர் கலைகளும் தமிழர் நாகரீகமும் உயிர்க் கொலையை எக்காரணங்கொண்டும் ஆதரிக்கவில்லை.

"அவிசொரிந்தாயிரம் வேட்டலின்—ஒன்றன்
உயிர் செகுத் துண்ணாமை நன்று"

என்னும் வள்ளுவர் திருமொழி, "யாகம்" என்னும் பெயரால் ஆரிய பார்ப்பனர் செய்யும் உயிர்க் கொலையை மிக வன்மையாகக் கண்டித்திருப்பதை யார் தான் அறியார்

---

*14-6-30. "திராவிடன்" தலையங்கம். ஆசிரியர் திரு. ஜனக சங்கர கண்ணப்பர் அவர்களால் எழுதப்பட்டது.

கள். "வேதம், வேதம்" என ஆரியர்களால் சிறப்பித்துக் கூறப்படும் நூல்கள் விபசாரம், கொலை, கட்குடி, முதலிய பாதகச் செயல்களை நேர்முகமாக ஆதரிப்பனவாகவே இருக்கின்றன. இந்த வேதக் கொடுமைகளைப் பார்க்கப் பொறுக்காமலே கௌதம புத்தர் தோன்றி ஜீவகாருண்ய மதம் என்னும் பௌத்த மதத்தை நிலைநாட்டினார். பிம்பிசார மன்னன் யாகசாலையில் புகுந்து யாக குண்டத்துக்கருகே தூண்களில் கட்டப்பட்டிருந்த ஆயிரக்கணக்கான ஆடுகளைக் கட்டறுத்து ஓட்டி, ஜீவகாருண்யத்தின் மகிமையைப்பற்றிக் கல்லும் கசிந்துருகுமாறு பிம்பிசாரனுக்குப் போதனை செய்து பிம்பிசாரனை பௌத்தமதத்தில் சேர்த்த வரலாற்றை புத்த சரித்திரம் படித்திருப்போர் உணர்ந்திருக்கக் கூடும். "மேதம், யாகம்" என்னும் பெயரிய உயிர்க் கொலையைத் தொலைப்பதே புத்தரின் தலை சிறந்த நோக்கமாயிருந்தது. அருளாளரான புத்தர் ஆரிய மதத்தை வேரறுத்து தனது ஜீவகாருண்ய மதத்தை இந்தியாவில் நிலைநாட்டினதுமன்றி வெளி யுலகத்திலும் பரவச் செய்தார். ஆனால் பிற்காலத்திய பார்ப்பனர்கள் தமது நயவஞ்சக போதனைகளால் ஹிந்து மன்னர்களை ஏமாற்றி பௌத்த மதத்தை, அது தோன்றிய நாட்டிலிருந்து ஓட்டிவிட்டனர். தற்காலப் பார்ப்பனர் இதர வேத விதிகளை மறந்தாலும் யாகத்தை மட்டும் மறந்ததாகத் தெரியவில்லை. தென்னாட்டிலே இப்பொழுது பார்ப்பனர்கள் அடிக்கடி யாகம் செய்வது பெருவழக்காக இருக்கிறது. விளக்கு தன்படியே அணையும்போது பரவிப் பிரகாசமாய் எரிவது இயல்பு; அது போலவே பார்ப்பன மதம் அல்லது வேத மதத்துக்குச் சாவு மணி யடிக்கப்படும் இக்காலத்தில், யாகங்கள் செய்து பார்ப்பன மதத்தை நிலைநிறுத்தப் பார்ப்பனர்கள் முயற்சி செய்கின்றனர் போலும்.

கடவுள் பிரீதிக்காக யாகம் செய்யப்படுவதாகக் கூறுவதுதான் பெரிய வேடிக்கை. கருணைக்கடல் என்றும், அன்புருவன் என்றும், போற்றப்படும் கடவுள் ஒரு ஆட்டைப் பலி செய்வதனால் மனமிரங்கி யாகம் செய்வோர்

விருப்பங்களைப் பூர்த்தி செய்துவிடுவார் என நம்புவது எவ்வளவு கேவலமானது! அன்புருவர் என்று சொல்லப்படும் கடவுள் மீது உயிர்ப்பலியேற்கும் துர்க்குணத்தை ஆரோபணம் செய்வோர் தெய்வத் துரோகிகள் ஆகமாட்டார்களா? உண்மையில் இவர்களையன்றோ நாஸ்திகர் என்று கூற வேண்டும்.

மது மாமிச பட்சணம் செய்வதினால் ஆதித்திராவிடர்களுக்கு சம உரிமை வழங்க மறுக்கும் இந்தப் படுபாவிகள் சாமிகளின் பெயரால் மதுமாமிசமுண்பது ஒழுங்காகுமா?

பௌண்டரீக யாகம், அஸ்வமேத யாகம் முதலியவைகளின் வரலாற்றை திரு. டி. எஸ். கனகசபை, சிதம்பர யாகத்தைப்பற்றி எழுதி யிருக்கும் கட்டுரையில் செவ்வையாக விளக்கியிருக்கிறார். பௌண்டரீக யாகமும், அஸ்வமேத யாகமும், பச்சை விபசாரச் சடங்குகளே யன்றி வேறல்ல. இவைகளை ஆதரிக்கும் ஒரு மதமும் மதமாகுமா? அந்த மதத்தைப் பின்பற்றுவோர் நல்லொழுக்க முடையவர்களா யிருக்கக்கூடுமா? நல்லொழுக்க உணர்ச்சியில்லாத ஒரு வகுப்பார் அறிவு முதிர்ச்சி பெறுவார்களா? அறிவு முதிர்ச்சி யில்லாத ஒரு வகுப்பார் உலக வாழ்வில் வெற்றி யடைவ தெங்ஙனம்? ஆழ்ந்து நோக்கினால் இந்தியாவின் தற்கால வறுமைக்கும், மடமைக்கும், அடிமைத் தனத்துக்கும், பௌண்டரீக யாகம், அஸ்வமேத யாகம், முதலிய விபசாரச் சடங்குகளை ஆதரிக்கும் பார்ப்பன மதமே காரணமாகும் என்பது விளங்காமற் போகாது. இந்த ஆபாசச் சடங்குகளின் உண்மையை பொதுஜனங்கள் அறிந்து விட்டால் தம் வயிற்றுப் பிழைப்புக் கெட்டு, வேத மதத்தின் வண்டவாளங்கள் வெட்ட வெளிச்சமாகி விடு மெனப் பயந்தே வேதத்தை சூத்திரர் படிக்கக்கூடாதென்று மோசக்காரப் பாப்பனர்கள் விதியேற்படுத்தினர். வேதம் படித்த சூத்திரர்களின் நாக்கை யறுக்கவேண்டு மென்றும், கேட்ட சூத்திரர்களின் காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி

ஊற்றவேண்டு மென்றும், தண்டனை விதித்தனர். ஆங்கிலேய அரசாட்சியின் புண்ணியவசத்தினால் வேதத்தை சர்வ ஜனங்களும் படிக்கும் நிலைமை ஏற்பட்டு விட்டதினால், வேத ஆபாசங்களைப் பொது ஜனங்கள் உணரத் தொடங்கி விட்டனர். அந்த வேத ஆபாசங்கள் மகா பாபச் செயல்கள் என்றும், கடவுள் பெயராலும் மதத்தின் பெயராலும் அவற்றை ஆதரிக்கக் கூடாதென்றும், அறிவுடையோர் எச்சரித்தால் அவர்களை வைதிகக் கிறுக்கர் நாஸ்திகர் எனப் பழிக்கிறார்கள். ஆனால் உண்மையில் நாஸ்திகர்கள் அவர்களே என்பதை அறியாமையினால் அவர்கள் உணர்வதில்லை. பொது மக்கள் அறிவு விளக்கம் பெற்று வருவதினால் இனி வைதிகர்களின் சூதுவாதுகள் பலிக்க மாட்டா. வேத மதத்துக்குச் சாவு மணி அடித்தாய்விட்டது. இந்தியர் அறிவு வளர்ச்சி யடைய வேண்டுமானால், பெண்கள் சுதந்தரம் பெறவேண்டுமானால், இந்தியர் வறுமை ஒழிய வேண்டுமானால், இந்தியர் அடிமைத் தனம் நீங்க வேண்டுமானால், இந்தியாவின் உயிரை அடிமைப் படுத்தி வைத்திருக்கும் இந்தப் பொல்லாப் பார்ப்பன மதம் ஒழிந்தே ஆகவேண்டும். ஒழியத் தொடங்கிவிட்டது. முற்றிலும் அழிந்தொழிவதும் நிச்சயம்.

---

Printed at The Royal Printing Works, Mount Road, Madras.

ம.30.

இந்த இருபதாம் நூற்றாண்டிலே பாரதக

எங்கும் ஒலிக்கின்றது சுதந்திர நாதம்
எங்கும் முழங்குகின்றது சுயராச்சிய மு

— ஆனால் இது —

எங்கும் கண்டிராத அதிசய தினுசு!
புதுமையில் புதுமை! அருமையில் அருமை!
அதிசயத்தில் அதிசயம்!

— அது என்ன? —

# சுதந்திரப் போர்

அல்லது

# உப்பள முற்றுகை

தென்பாதி, T. S. கனகசபையால்
எழுதப்பட்ட ஒரு நவீன கற்பனைக் கதை.

வீரம் செறிந்தது! ஆண்மை நிறைந்தது! ஆர்வம் மிகுந்தது!
அலங்கார நடை! அற்புத சம்பவம்! அதிசயக் காதல்!

இந்தியனாகப் பிறந்த ஒவ்வொருவரும் அவசியம்
படிக்கவேண்டிய புத்தகம்.

விலை அணா நான்கு.

வேண்டுவோர் 5 அணா ஸ்டாம்பு அனுப்பவும்.

அருணகிரி அண்டு கம்பெனி,
தபால் பெட்டி 377,
மவுண்ட் ரோட் : : சென்னை.

The Royal Printing Works, Madras.